"THE OBJECT OF EDUCATION MUST BE TO AWAKEN THE SPIRITUAL LIFE OF PUPILS."

*Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*" Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

'HITCH YOUR WAGON TO A STAR." " TO THINE OWN SELF BE TRUE."

EDUCATIONAL AND SOCIAL




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம் தத்ஸத்.] [God is Love : Knowledge is Power : *Aum*

**"New Series"** ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.** **"Approved"**

புத்தகம். **24.]** நள௵ வைகாசி௴, **1916**௵ மே௴ [சஞ்சிகை **2.**

"THE OBJECT OF EDUCATION MUST BE TO AWAKEN THE SPIRITUAL LIFE OF PUPILS."

## REFORM OF RURAL EDUCATION.

*(Letter to the Press and Leading Educationists.)*

Sir,—In sending you herewith a copy of my "Lyrics and Lay-songs of Temple Legends" which is dedicated through the Minister in charge of Education "to *those Children of Light* who whatever their age or clime, are ever the guiding Angels of the Race and the true Messengers of Hope, Faith and Love which three alone have the power of uplifting Humanity above its own faults, failings and errors", I beg leave to invite your attention and that of the enlightened public, especially those who are in charge of rural Education and of children of school-going age, the remarkable object lesson which the "Danish Peasant Schools" present to those who are confronted with the difficulties of solving the Educational problem in India.

The writer of the article in the current *Modern Review* (for May 1916) opens it with the suggestive remark: "Now that the question of educating the young rural population of India is before the Government and the public a short account of 'Danish Peasant Schools' may be interesting to readers."

While commending the whole article to the careful and earnest consideration of the Government and Educational Reformers "outside that charmed circle" I may be allowed to cull the following gems of thought which would throw light on the fundamental principles of Educational Reform which are common to all humanity.

"It is necessary to elevate the pupils and for that purpose to revive their religious and patriotic sentiment;

"(1) that no beauty is too high for them;

"(2) that the purest sources of intellectual and moral life must be placed within their reach;

"and (3) that with the new schools a living, real and national education should be created,"

These are the words of the Danish Poet Nikolai Frederik Severin Grundtwig with whom originated the movement for elevating the rural population of Denmark which has since then been an object lesson to the world as regards the improvement of her rural population. The high standard of intellectual culture of the Danish Peasant and the marvellous progress made by their agricultural and economic institutions have always impressed the students of rural economy. "The secret of it all lies," says the writer to whom we are indebted for this brief summary, "in the introduction of a rational system of education and in the efforts of a group of Danish patriots to whom patriotism is almost a part of their religion."

The guiding principles of these schools which have infused new life into the 47 per cent. of the children of the peasant population who are passing through them are that—

(1) The instruction must be direct from the mouth of the teacher, who must come into relation with his pupils by means of a real familiar conversation. The voice "coming from the human breast (purified of its dross) *alone* can give words strength and wings and awaken the slumbering soul of the pupil by "going into the unseen to awake the invisible mental life."

(2) The education must be general in character, aiming at opening new horizons in every direction and cultivating the patriotic, religious and æsthetic sentiments. When this is attained the school would produce such men who would be capable of learning agriculture or any other profession with profit.

(3) Instruction should be given in the mother-tongue. (The Danish Elementary Schools, keep the child in school until 14 or 15 years old, thus giving a thorough grounding in various branches of studies which he is able to resume and carry on in "the High Schools" "to a degreeof refinement very rare among peasants.")

(4) The teaching of history, specially the national history and national poetry should form an essential part of the instruction. Grundtwig was very keen on the methods of teaching history. He says "History must be related in *poetic* language, as it passed from mouth to mouth in the recitation of the Scalds." He emphatically discouraged the practice of learning a mass of facts, statistical tables, etc., by heart in chronological order.

(5) *The object of Education must be to awaken the Spiritual life of pupils* by means of free lectures to excite patriotism through a right understanding of the language, nature and history of their country—to do for the civic life of the people what the Church is doing for their religious life.

(6) The moment of rousing the high appreciation of the pupils for what is high and noble in human life ought, in the new system of teaching, be considered more important than that in which they acquire a grammatical idea or solve a mathematical problem; which they should also learn but as subordinate to the principal work.

(7) While realising the fact that the school must not be a "political tribune" the pupils must be given a sufficiently clear idea of the existing political conditions which will enable them to take their place in the civic life of the country when they come to take their part as men in the Great Battle of Life.

(8) The object in teaching science, must be, not to make men of science, but *minds* capable of understanding the sciences. With this object steadily kept in view, a general outline of science must be taught—the education in natural sciences, Geometry and Mathematics in High Schools being specially advanced. (The Professors first instruct in the earliest scientific discoveries and then relate the lives of men of science and inventors. Biographical sketches of those who contributed to the progress of science appeal to the imagination of the pupil,—which must be cultivated to the highest level possible.)

These principles formulated by the Danish Poet were declared to be the basis of sound education by our own poet Rabindranath whose educational movement is bound to spread. And it gives me great pleasure to note that these principles on which I have myself been working in my limited sphere these many years have the approval of such world-wide celebrities as Grundtwig and Rabindranath.

LALITALAYA,
MADRAS, S.
13*th May* 1916.

C. V. SWAMINATHAIYAR.

புஸ்தகம்-24.] "The Children's Favourite, the Teachers' Help, and the Parents' Guide." [சஞ்சிகை-2.

நள௵ வைகாசிமீ.

விவேக  சிந்தாமணி

April-May. 1916.

ESTABLISHED 1892

"பெற்றோர்கள் தாழவப்பர் பிள்ளைகளி லாசையுள்ளோர்
கற்றே மெனவுகந்து கற்பர் பின்னும்—மற்றோர்கள்
மாச்சரியந் தாலிகழில் வந்ததேன்னோஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

## RURAL EDUCATION.

### நாட்டுப் புறத்தார்க்கு வசதியான வித்யாபோதனை.

---

தேசம் என்பது பொதுவில் க்ஷேத்திரத்திற்குப் பெயர். சிறப்பிலக்ஷணம்கொண்டு தேசத்தில் வசிக்கும் ஜனங்களுக்கு அப்பேர் பொருந்தும் பொழுது அது நாடு, நகர் என இருவகைத்தாக விளங்கும். நாட்டுப்புறவாசம் என்பது பட்டணமல்லாத வெளியூர்களில் வசிப்பவர்களுக்குரியதாம். நகர்ப்புறவாசம் என்பது பட்டணங்களிலும் நகரங்களிலும் வசிப்பவர்களுக்குரியதாம். நாட்டுப்புறங்களில் ஜனங்கள் சிதறுண்டு பரவி அன்றைப்பாடு அன்றோடே யென்று உழைத்துண்டு வாழ்வார்கள். நகர்ப்புறங்களில் ஜனங்கள் வர்த்தக, வியாபாரம், துரைத்தனம் முதலிய துறைகளில் இறங்கி உத்யோகம் செய்தும் ஏழைகள் கூலிவேலைசெய்தும் பிழைப்பார்கள்.

நாட்டுப்புறத்தார் பெரும்பாலும் வியவசாயிகளாயிருப்பார்கள். அவர்கள் தான் "உழுதுண்டு வாழ்வார்." அவர்களால்தான் தேசத்தின் செல்வம் விருத்தியடைகிறது. நகரமாக்களோ நாட்டுப்புறத்தார் உழைப்பால் உண்டான செல்வமாம் விளைபொருள்களை வாங்கியும் விற்றும் வர்த்தக வியாபாரம் மூலமாய் அவைகளை தூரதேசங்களுக்குப் பரவச்செய்தும் அதனால் வரும் லாபத்தைக்கொண்டு ஜீவிப்பார்கள். துரைத்தன காரியங்கள் பார்ப்பது வியவகாரதசையைச் சேர்ந்ததே. வியவகாரத்துக்கும் வியவசாயத்துக்கும் என்ன வித்யாசமுண்டோ, அதே வித்யாசம் நகர்ப்புறத்தார்க்கும் நாட்டுப்புறத்தார்க்கும் உண்டு.

வித்தையென்பது அறிவின் விர்த்தி. படிப்பு என்றாலும் அதே அர்த்தம் கொள்ளும். மனம் படியப்பெறுவது படிப்பு. "கற்றதோர் கல்வியும் மனப்பழக்கம்" என்றார் ஔவையாரும். இந்த மனப்பழக்கமாகிய வித்தை நாட்டுப்புறத்தார் நகர்ப்புறத்தார் என்றுள்ள சிறப்புப்பற்றி வியவகார-வியவசாய பேதம்போல் வித்யாசப்பட்டு விளங்கினும் மன்னுயிர் எல்லார்க்கும் பொதுவான சில மனோசிக்ஷைகளுண்டு. அவைதான் எண் என்றும் எழுத்தென்றும் சொல்லப்படுவன.

"எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்"

'எண்' என்றால் மனதால் எண்ணும் எண்ணம். கணிதம் மனோசிக்ஷைக் காதாரமானதுபற்றி சிறப்புப்பேர்கொண்டு 'எண்' என்பது கணிதத்துக்கு விசேஷப்பேராகச் சொல்வதுமுண்டு.

எண் என்பதில் மனோதத்துவ சாஸ்திரம் எல்லாம் அடங்கும். எழுத்து என்பதில் இலக்கிய இலக்கணங்களெல்லாம் அடங்கும். மனோதத்துவ சாஸ்திரங்களும் இலக்கிய இலக்கண நூல்களும் முகத்துக்கு இருகண்கள் எப்படி

யோ அப்படி அறிவுக்குக் கண்ணாக (பார்க்கும் கருவியாக) விளங்கும். இதை Reading, Writing and Arithmetic என்று சுருங்கச் சொல்வதுண்டு. அதாவது வாசிக்கப் பழகுவது எழுதப்பழகுவது, கணக்குப் பார்க்கப் பழகுவது என மூவகைப் பழக்கமாகச் சொல்வர்.

அரிச்சுவடி கற்றால் வாசித்தாய்விட்டது; அக்ஷரங்களை யெழுதி கையெழுத்துப்போடத் தெரிந்துவிட்டால் எழுதப் பழகியாய்விட்டது; இரண்டும் மூன்றும் ஐந்து என்று விரல்விட்டுக் கூட்டப் பழகிவிட்டால் கணக்குப் பார்க்கப் பழகியாய்விட்டது என்று சொல்வாருமுண்டு. இவர்கள் சுவானம்போல் வித்தையை நக்கிக் குடிக்கக் கற்றவராவர். "பால் ஆறாக ஓடினாலும் நாய்க்கு நக்கித்தான் குடிக்க வரும்." அதுபோல வித்தை அளவற்று சமுத்திரம்போல் விரிந்து நிறைந்திருந்தாலும் அற்ப புத்தியுள்ளவர்களுக்கு சொற்பப் படிப்புத்தான் வரும்.

இது யாருடைய குற்றம்?

நாய் நக்கிக் குடித்தாலும் வயிறு நிறையக் குடிக்கலாமல்லவா? அதுபோல், எழுதப்படிக்கவும் கணக்குப் போடவும் சொற்பம் கற்றிருந்தாலும் இந்த சொற்ப ஏட்டுப் படிப்பைக் கொண்டு உண்மையான வித்தையைப் பூரணமாய்க் கற்றுக்கொள்ளலாம். தன் பேரை யெழுதத் தெரியாத ஒரு கொல்லத்துக்காரன் விசுவகர்மாவும் மெச்சத்தக்க ஒரு மாளிகை கட்டப் பழகியிருக்கலாம். இவனுக்கு ஏட்டுப்படிப்பு இல்லாமையினால் கைப்பழக்கம் இல்லையென்று சொல்லலாமா? சொல்லுதல் அமையாது.

"எல்லாரும் பல்லக்கேறினால் தூக்குவது யார்?"

இந்தப் பழமொழி. மிகவும் மேலான புத்திமதியைப் போதிக்கும் பழமொழி. எல்லாரும் ஏட்டுப்படிப்புப் படித்து ராயஸக்காரர்களாக முயன்றால் உழுது பயிர் செய்வது யார்? உழைத்துத் தொழில் புரிவது யார்? இப்படி ஜன சமஷ்டியின் தர்மம் சிதறாதிருக்கும்படிக்கே வர்ணாச்ரம தர்மம் என்னும் பூர்வீகமான கட்டுப்பாடு ஏற்பட்டது. அதை இக்காலத்தார் உண்மையுணரத்திறனன்றிதப்பர்த்தம் செய்து பிதற்றித்திரிகிறார்கள். நற்குணம் பிறப்பினால் அமையத்தக்கது. அதாவது பரம்பரை பற்றி மனமும் இந்திரியங்களும் தீக்ஷண்யம் பெற்று விளங்கும்.

"மீன் குஞ்சுக்கு நீஞ்சச் சற்றுச்சொடுக்க வேண்டுமோ?"

என்பது ஓர் சிறந்த பழமொழி. மீன் குஞ்சுக்கு நீந்துதல் எப்படி பிறவிக்குணமாய் அமைந்து விளங்குகிறதோ, அப்படிப்போல தொழிலாளி மகனுக்குத் தொழில் செய்வது தானே வரும். ஏனெனில் விச்சைப்போலிருக்கும் மரம். சதுர்வர்ணம் ஏற்பட்டது புருஷார்த்தம் நான்கை யொட்டியென்று மேலோர் சொல்லுவர். புருஷார்த்தம் நான்காவது:— அறம், பொருள், இன்பம், வீடு.

தன்னைக் கொடுத்தல் (Self-Sacrifice).

"அந்தணர் என்பர் அறவோர்" என்றதனாலும் "ஈதல் அறம்" என்று ஔவையார் கூறியிருப்பதினாலும் கொடைகளெல்லாவற்றிலும் சிறந்ததான "தன்னைக் கொடுத்தல்" (Self-Sacrifice) உத்தம வர்ணத்தாரான பிராமணர்க்கு இயற்கையாக அமைந்த தொழில். பகவான் அருள்பெற தன்னைக் கொடுத்துதவுகிறாராதலால் இவர்களுக்கு பிராம்மணர் "பிரஹ்மத்தை யறிந்தவர்" என்று பேர் வந்தது. "பாப்பாரப் பயலுக்குப் பிறந்தவனெல்லாம் பிராமணன் ஆகமாட்டான்" என்பது சாமான்ய பொது ஜன வாக்கு. அர்த்த சாஸ்திரம்-பொருளீட்டல். Economics.

"தீவினை விட்டீட்டல் பொருள்" என்றாதலால், உழவு-தொழில்-வியாபார-வர்த்தகத் துறைகளிலிறங்கி "திரைகடலோடியும் திரவியம்தேடு" என்பதை கடைப்பிடியாகக்

கொண்டு அர்த்த சாஸ்திரம் (Economics) பயின்று பொருளீட்டு வழியிலிறங்கி யுழைப்போர் வைசியர்களாவர்.

பாதுகாத்தல்—Protection.

தன்னைக் கொடுத்துப் பரோபகாரம் செய்தலை தொழிலாக உழைக்கும் சாதுக்களையும், சண்டை பூசல்களுக்குப் போகாமல் பொருளீட்டல் ஒன்றே தொழிலாக வுழைக்கும் அர்த்த சாஸ்திர சம்பிரதாயிகளான வைசியர்களையும் துஷ்டர்கள் துன்புறுத்தாது பாதுகாத்தல் வேண்டும். அதற்காக துஷ்டநிக்ரகம் செய்து சிஷ்டபரிபாலனம் செய்வோராய் புஜபல பராக்கிரமங்கள் பொருந்தி ஏழை எளியவர்கள் வலியார் கெடுக்காது உட்பகை புறப்பகை யென்றுள்ள இருவகைப் பகைவர்களாலும் பாதகம் நேரிடாது பாதுகாப்பது க்ஷத்திரிய தர்மம். இந்த தர்மநெறி நின்றொழுகுவோர் க்ஷத்திரியர் ஆவர். "அரசன் அன்றுகொல்லும் தெய்வம் நின்றுகொல்லும்" என்றபடி ஜனசமஷ்டியில் துஷ்டர் கொட்டம் அதிக்கிரமித்துப் போகாதபடி பாதுகாக்க வல்ல இவர்கள் க்ஷேத்ரபாலர்களாக (அரசர்களாகவும், அரசர் படைகளாகவும்) இருந்து ஜனசமஷ்டிதர்மம் சிதறாது காத்து வருவார்களாயினர். இவர்களால்தான் ஜனசமஷ்டியில் இன்பநுகர்தலும் அதனால் விளையும் பிரஜாவிருத்தியும் சாத்தியமாதலால் ஜனசுகத்துக்கு க்ஷேத்ரபாலகரான அரசர்களாம் க்ஷத்திரிய வர்ணத்தார் ஜனக்ஷேமத்துக்கு இன்றியமையாதவர்களானார்கள்.

பரனை நினைந்திம்மூன்றும் விட்டது-வீடு.

வீடு அல்லது மோக்ஷ தர்மத்தைக் காப்பாற்ற சூத்ரர்கள் ஏற்பட்டார்கள் என்றால் இக்காலத்துப் படிப்புப் படித்தவர்கள் கைகொட்டிச் சிரிப்பார்கள். ஆயினும் சூத்ரஜாதியின் தொழில் என்ன? அடிமை புரிதல். இந்த அடிமைத் தொழில் எல்லாத் தொழிலினும் அருமையானது. அருமையானதுபற்றிப் பெருமையானது என்றும் சொல்லத்தகும். யேசுகிறிஸ்து தன் சிஷ்யர்கள் காலைக்கழுவி யஜமான ஸ்தானம்பெற்றவர்க்கு தொண்டு புரிதலினும் பெருமையான வேலை வேறில்லை யென்று அவர்கள் கடைசியாக அறியவேண்டிய படிப்பினையிதுவென்று காட்டினர். "உலகெலாமுணர்ந்து ஓதற்கரியவன்" ஆன எம்பெருமான் நடராஜ மூர்த்தியும் "தில்லைவாழந்தணர்தம் அடியார்க்குமடியன்" என்று தன் பெருமையை சிறுமைப்படச் சிறப்புக் காட்டியருளினரல்லவா? "பெருமையிற் சிறுமை"யைப்போல் பேரின்பம் தரும்குணம் வேறில்லை. இதற்கு நந்தனர் சரித்திரமே உவமானமாம். "தாழாமற் தாழ்தல்" என்பது இதற்கே பொருந்தும். அப்படியென்றால் பெருமைக்கடலாம் அரும்பெருங் கருணைக்குத் தாழ்வு நேராமல் தாழ்ந்து பணிந்து வீழ்ந்தாரைக் கைதூக்கி விடல் எல்லாப் புருஷார்த்தங்களிலும் மேலானது. இதற்கு சூத்ரஜாதியை பரிபாலகராக நியமிக்க வேண்டுமென்றால், பகவானுடைய கபட நாடகசூத்திரத்தை யாரே அறியவல்லார் அவருடைய அடியார்களன்றி மற்றவர்யார் அவர் பெருமையைப் புகட்டவல்லார்? "அறுபத்திமூவர்" என்று சிறப்புப் பெயர்பெற்ற அறுபத்திமூன்று சிவனடியார்கள் புராணத்தையும் உள்நோக்கி ஆராய்ந்து ஒவ்வொன்றினுமுள்ள குணத்தைக் கிரகித்து அவர்கள் சரித்திரத்தை அவரவர்களின் குணச்சிறப்பின் வர்ணனையாகக்கொண்டு (Character Sketch) பார்த்தால் அன்னார் அனைவரும் கர்மத்தால் கடைத்தேறினவர்கள் என்று நன்றாகத் தெரியவரும். யேசுகிறிஸ்துவும் தான் வீழ்ந்தாரைத் தூக்கிவைத்துத் தாழ்ந்தாரை வாழவைக்க அவதரித்ததாகச் சொல்லியிருக்கிறாரன்றோ!

சமஷ்டிசேவை—(Social Service).

ஆதலால் சமஷ்டி சேவையிலும் சிறந்த தொழிலொன்றில்லை. இதுயாரால் முடியும்? அறம் பொருள், இன்பம் ஆகிய மூன்று புருஷார்த்தங்

சீனயம் தேடியடைந்து அனுபவித்து இவற்றில் உருசியில்லையென்று விட்டு பரங்கருணை வள்ளலாகிய "பரனை நினைந்து" மேலேசொன்ன "இம்மூன்றும் விட்டதே"—"பேரின்ப வீடு" அளிக்கும் "சமஷ்டிசேவை சாதனமாம்." இந்த சாதனத்தைக் கொண்டோர் எளியாரிலும் எளியராயிருந்து வலியார் கொட்டத்தை யடக்கவென்றே எளியார்க் கெளியனுயிருந்து ஏழைகளோடு கலந்து அவர்கள் படும் கஷ்டநஷ்டங்களையும் துன்பதுக்கங்களை உடனிருந்துண்டு தொட்டதை யெல்லாம் பொன்னுக்கும் பரிசவேதிபோல் அவர்களுடைய ஞானசித்தியினால் துன்பங்களை யெல்லாம் இன்பமாக மாற்றும் சூக்ஷ்மத்தை அடியார்க்கடியனுயிருந்துணர்த்தும் பரமனை வழிபட்டுணர்ந்து அவனைத் தொழுவதிலும் சமஷ்டி சேவை செய்வதே அவனுக்குத் திருப்தியென்றுணர்ந்து உண்மைக்குழைப்போர் ஊருக்குழைக்க வேண்டுமென்று உழைப்பின் உள்மர்ம முணர்ந்து "நைஷ்கர்ம ஸித்தியால்" கர்மபந்தம் தோற்றுமல் கர்மத்தைச் செய்து வினைவளர்க்காது வினைதீர்த்து விளையாட்டாகத்தானே எல்லாக் கர்மங்களையும் கர்ம தர்மம் உணர்ந்து உணர்த்தவும் உணர்த்தியும் காட்டி உலகை ரக்ஷிக்கத் தன்னைக்கொடுத்துப் பரனைக்கொண்டு எல்லாம்விட்டு எல்லாம்பற்றி பற்றற்ற நிலையிலிருந்து பாடுபட்டுழைப்பார்கள். அவர்கள் ஐகிக தோரணையில் பிரம்மாவினுடைய காலிலிருந்துதித்தவர்களாகச் சொல்லப்படுவர். பிரம்மா என்பவன் சமஷ்டி ஜீவன். இந்தச் சமஷ்டி புருஷன் நடக்கக் காலாயிருந்துதவுவது "சமஷ்டிசேவை" (Social-Service) ஆகையால் "Progress of the world" என்று சொல்லும் சமஷ்டி ஜன அபிவிருத்திக்குக் காரணமாயிருந்து கால்போலுதவுவது "சேவக" தர்மமாதலால், கடவுளுக்கு "சேவகன்" என்கிற சிறப்புப்பேரும் உண்டு. பரதர்மம் இகப்பற்றுள்ளார்க்குத் தலைகீழாக விருக்கத்தோன்றும். அகப்பற்றுவிட்டால் உள்ளது உள்ளபடி தோன்றும். இப்படி யுழைப்பவர்களில் இக்காலத்திற் சிறப்புற்று விளங்குகிறவர்கள் ஸர் ரவீந்திரநாத் தாகோர் ஒருவர்; மற்றொருவர் மிஸ்டர் காந்தி. அழியாத புகழுடம்பெடுத்தவர்களில் ராமகிருஷ்ண பரமஹம்ஸர் பேரும் யேசுகிறிஸ்துபேரும் மற்ற அடியார்கள்பேரும் கல்லிலெழுத்துப்போல் காலசக்ரத்தில் அழுந்தி அச்சுமாறுமல் அநவரதம் திகழொளிவீசி மன்னுயிர்க்கு வழிகாட்டி நிற்கின்றன.

டென்மார்க் தேசதில் இப்படிப்பட்ட மஹாபுருஷராய் விளங்கிய கவிவாணர் ஒருவர் முயற்சியினலே நாட்டுப்படிப்புச் சிறந்து விளங்குகிறது. அங்கே யேற்பட்டுள்ள வியவசாயிகள் பள்ளிக்கூடங்களில் 100-க்கு 47 விகிதம் வியவசாயிகளின் குழந்தைகள் படித்துத்தேறிவருகிறார்கள். இவர்கள் ஏட்டுப் படிப்பே முக்கியமென்று இலவுகாத்த கிளிபோல் மோசம் போகாமல் மனம்படியப் பெறுவதே படிப்பு என்று மனப்பழக்கம் பெற்று அதனுல் கைப்பழக்கமும் நாப்பழக்கமும் கூடப்பெற்று எந்தத் தொழிலை வேண்டுமானுலும் எளிதில் கற்றுக்கொள்ளும் மனேபக்குவம்வாய்ந்தவர்களாகப் பள்ளியைவிட்டுப் பிரபஞ்ச வாழ்வில் நுழைந்து தீரர்களாக உழைத்துவருகிறார்கள். அந்தப் பள்ளிக்கூடங்களின் சிறப்பை இச்சஞ்சிகையின் முகப்பில் இங்கிலீஷில் எடுத்துக்கூறியிருக்கிறோம்.

## DANISH PEASANT SCHOOLS

## டென்மார்க் நாட்டு வியவசாயிகள் வித்யாசாலை.

இத்தலைப்பின்கீழ் மிஸ்டர் நாகேந்திரநாத் காங்குளி யென்பவர் "மாடர்ன் ரிவியூ" என்னும் மாதாந்தப்பத்திரிகையின் மேமாசத்துச் சஞ்சிகையில் எழுதியிருக்கும் விர்த்தாந்தத்தை ஆதாரமாகக்கொண்டே நமது தேசத்திலும் நாட்டுப்புறத்தார்க் குபயோகமான படிப்பு வெறும் ஏட்டுப்படிப்பாகவின்றி மனம் படியப்பெறும் உண்மைப் படிப்பாக விருக்க வேண்டுமென்று வற்புறுத்தி கனம் அரசர் பிரதிநிதியவர்களுக்கும் கனம் வித்யா மந்திரியாகிய ஸர் ஸங்கரன்நாயர் அவர்களுக்கும் வித்யா சிரேஷ்டர்களாய் விளங்கும் உத்யோகஸ்தர்களுக்கும் பத்திராசிரியர்களுக்கும் ஒரு கடிதம் எழுதி அஃதை நாதகித "நாமகள் சிலம்பொலி" யென்னும் சிறுபுஸ்தகத்தோடு அனுப்பியிருக்கிறோம். அந்த விருத்தாந்தத்தை தினசரிப் பத்திரிகையொன்று தமிழ்ப் படுத்தியிருக்கின்றது. அதையே யெடுத்துச் சீர்திருத்தி இதன்கீழேதானே பிரசுரித்திருக்கிறோம். விவேகசிந்தாமணியை வாசிப்போர் ஒவ்வொருவரும் இது விஷயமாகச் செய்தாகவேண்டிய முயற்சிக்கு அனுகுணமாயிருந்து ஆதரவளிக்க வேண்டின் இவ்விஷயத்தை ஆரத்தீர அமர்ந்து படித்து யோஜித்து "செய்வன திருந்தச் செய்" என்னும் மூதுரையைக் கடைப்பிடியாகக் கைப்பிடித் தொழுகல் வேண்டும்.

நாட்டுப்புறச் சிறுவர்களுக்கு கல்விகற்பிக்கும் விஷயத்தைப்பற்றி இந்தியா கவர்மெண்டாரும் ஜனசிரேஷ்டர்களும் ஆலோசித்து வருகிறார்கள். டென்மார்க்கு தேசத்துக் குடியானவர்களின் குழந்தைகளுககு எப்படி அத்தேசத்தில் கல்வி போதிக்கிறார்களென்பது கவனிக்கத் தகுந்த விஷயம். குடியானவர்கள் வித்யாபிவிருத்தியில் பாடுபட்டுழைக்கும் தேசங்களில் டென்மார்க்கு தேசம் பிரதமையானது. அவ்விஷயத்தில் மற்றத் தேசங்கள் அச்சிறிய தேசத்தின் உதாரணத்தைக்கொண்டு அறிந்துகொள்ளவேண்டிய விஷயங்கள் பல உள. அந்நாட்டுக் குடியானவர்கள் பயிர் செய்யும்முறை, அவர்கள் பொருளாதாரவிருத்திக்காகச் செய்திருக்கும் ஸ்தாபனங்கள் எல்லாம் விவசாய மாணவர்கள் பலரும் கவனிக்கத்தகுந்தன. இப்படிக் கெல்லாம் அத்தேசம் வியவசாயத்தில் முன்னுக்கு வந்திருப்பதற்கு அந்நாட்டுத் தேசாபிமானிகளின் விடாமுயற்சியே காரணமாகும். டென்மார்க்கு வியவசாயிகள் கூடுமான வரையில் 100-க்கு 47 பேர் சாஸ்திர முறையில் வியவசாயத்தொழிற் கல்வி கற்றவர்கள். இந்த வியவசாயிகளுக்கு கல்வி கற்பிக்கும் வித்யாசாலைகள் அந்நாட்டில் "ஹைஸ்கூல்கள்" என்று பெயர்பெறும்.

### வியவசாய கலாசாலை ஸ்தாபனம்.

நாட்டுப் புறத்தார்க்கமைந்த வித்யா ஸ்தாபனம் முன்ன மிருந்த ஒரு கவிவாணர் நிக்கோலே ப்ரடரிக் ஸேவரின் க்ரண்ட்விக் என்பவரால் உண்டாயிற்று. இவரே 1844-ம் வருஷத்தில் ஒரு பெரிய பொதுக்கூட்டம் கூட்டி, தமது நாட்டிற் கேற்ற தேசவித்தை மதவித்தை முதலியவற்றை தம் நாட்டவர்க்குக் கற்பிக்கவேண்டுமென்று போதித்தார். அவ்வார்த்தைகளைக்கேட்ட அந்நாட்டார் அவரையே தமது தலைவராக வைத்துக்கொண்டு அவர் புத்திமதியைக்கேட்டு டேனிஷ் வியவசாய ஜனங்களுக்கு உபயோகமாகும்படியாய் 'ஹைஸ்கூல்களை' ஏற்படுத்தினார்கள்.

### ஏட்டுப்படிப்பு இல்லை.

இப் பள்ளிக்கூடங்களில் வியவசாயிகளுக்கு ஏட்டுப்படிப்புப் புஸ்தகங்கள் ஏற்படவில்லை. 'புரொபெஸர்கள்' (போதகர்கள்) பிரசங்கங்கள் செய்வதேதவிர, புஸ்தகத்தைப் பார்த்து மாணவர்களை நெட்டுருச் செய்யச்சொல்வதில்லை. போதகா ஒவ்வொரு மாணவரிடமும் நேரிற் பழகி மனமொத்து சம்பாஷித்துக் கல்வி புகட்டவேண்டும். இப்பள்ளிக்கூடத்தை

ஸ்தாபித்த கவிவாணர் இவ்விஷயத்தை அப் பள்ளிக்கூட போதனைபாகத்தில் வற்புறுத்திச் சொல்லியிருக்கிறார். மனிதன் ஹிருதய கமலத்திலிருந்து வரும் வாக்குமட்டுமே வார்த்தைகளுக்கு உறத்தையும் உய்ப்பிக்கும் சக்தியையும் கொடுக்கும் என்று அவர் சொல்லுகிறார். இப்பள்ளிக்கூடங்களில் 18-முதல் 25-வயது வரையிலுள்ள பிள்ளைகளே சேர்க்கப்படுகிறார்கள். வியவசாயக்கல்வி இம்மாதிரியான வயதுள்ளவர்களின் மனதிலேயே ஆணியறைந்தாற் போலும் பதியும் என்பது, அக்கல்விச் சாலை ஸ்தாபனத்திற்குக் காரணரான கவிவாணரின் அபிப்பிராயம்.

ஸ்வதேச சரித்திர ஞானம்.

தொழில் கற்கவென்று இப்பள்ளிக்கூடங்கள் ஏற்படவில்லை. இந்த ஹைஸ்கூல்களில் பொதுவாக மனப்பழக்கக்கல்வியே பிள்ளைகளுக்கு போதிக்கப்படுகிறது. அவர்கள் பிற்காலத்தில் வியவசாயத் தொழிலையும் வேறு எத்தொழிலையும் கிரகிக்கவல்ல நிபுணராக மாறுகிறார்கள. ஸ்வதேசியசரித்திரமும், கவியும் முக்கியமான பாடங்களாகக் கற்பிக்கப்படுவதில், இச்சரித்திரத்தைக் கவிகளின் மூலமாய் உருக்கமாய்ச் சொல்லிக்கொடுக்கும் மார்க்கத்தை, மேற்கூறிய கவிவாணர் ஏற்பாடு செய்திருக்கிறார். இவர் சரித்திரத்திலுள்ள விசேஷ சமாசாரங்களை கிளிப்பிள்ளைகளுக்குச் சொல்லிக்கொடுப்பதுபோல இன்னின்ன வருஷங்களில் இன்னின்ன நடந்தேறின வென்பவற்றைப்பற்றி ஒன்றும் சொல்லிக் கொடுக்க வேண்டாமென்று திட்டப்படுத்தி யிருக்கிறார்.

தேச பாஷையிற்போதனை.

இப் பள்ளிக்கூடங்களில் தேச பாஷையிலன்றி வேறு பிற எப்பாஷையிலும் கல்வி கற்பிக்கப்படுதலில்லை. மாணவன் பள்ளிக்கூடத்தை விட்டு வெளியே போகுமுன்னல் டேனிஷ் பாஷை பேசுவதில் நிபுணனுகிறான். டென்மார்க்குத் தேசத்தில் 14, 15, வயது வரையில் எலிமெண்டெரி ஸ்கூல்களில் மாணவர்களிருக்கவேண்டிய சௌகரிய மிருக்கிறபடியால், இவர்கள் எல்லாரும் தேசபாஷையில் நிபுணராவது சுலபசாத்தியமா யிருக்கிறது. ஹைஸ்கூல்களில் இந்த வியவசாய மாணவர்களைத் தம் தேசபாஷையில் பயிற்றும் மாதிரி வெகு சிலாக்கியமானதாய் ஏற்பட்டிருக்கிறது.

பள்ளிக்கூடச் சம்பளம்.

எல்லா மாணவர்களும் சம்பளம்கொடுக்க வேண்டிய கட்டாய முண்டு. சம்பள விகிதமும் வெகு குறைவாக ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

பரீக்ஷை, யோக்கியதா பத்திரங்கள் இல்லை.

இப்பள்ளிக்கூடங்களில் பரீக்ஷையே இல்லை. வாய்வார்த்தையாகக்கூடப் பையன்கள் பரீக்ஷிக்கப்படக்கூடாதென்பதே இக்கலாசாலை ஸ்தாபகரின் அபிப்பிராயம். எல்லாரையும் சேர்த்துக்கேள்வி கேட்கப்படுமேயன்றி ஒரு மாணவனை மட்டும் கேள்விகேட்டுப் பரீக்ஷிப்பதென்பதில்லை.

மாணவர்களுக்கு யோக்கியதாப் பத்திரங்களும் கொடுப்பதில்லை. இவர்களுக்குப் பரீக்ஷை வைத்து இவர்களை கோபன்ஹேகன் பட்டணத்து வியவசாய கலாசாலைகளில் சேர்க்கும்படி உத்தர விடப்பட்டது. அப்போது அக்கலாசாலைகளின் ஸ்தாபகர் சொன்ன பதிலின் சாராம்சம் பின்வருமாறு:—

"மாணவர்களுக்குப் பரீக்ஷையினுல் ஆக வேண்டுவதில்லை. வியவசாய விஷயத்தைக் குறித்து விசாலமான பிரசங்க மூலமாய் அவர்கள்மனதில் தேசாபிமானத்தை எழுப்பி, ஸ்வதேசிய சரித்திரஞானத்தினுல் அவர் மனதில் கிளர்ச்சி யுண்டுபண்ண வேண்டுமென்பதே எங்களுடைய நோக்கம், தேவாலய பாதிரிமார் மதபோதனையாக ஏது செய்துகொண்டிருக்கிறரோ, அதுபோல் தேசத்திற்குற்ற நன்மையை சரித்திரபோதனை முதலியவற்றினுல்

நாங்கள் செய்துகொண்டு வருகிறோம். அதனால் கணிதம், இலக்கிய இலக்கணம் முதலியவற்றை நாங்கள் இகழவில்லை. அவற்றைப் பின்னிட்டு மாணவர்தாமே அறிந்துகொள்வார்கள். ஆகையால் பரீக்ஷையை உத்தேசித்துப் பிள்ளைகளை நாங்கள் தர்பீது செய்யவில்லை.

பள்ளிக்கூடங்களின் சங்கியை.

இப் பள்ளிக்கூடங்களில் ராஜரீக விஷயங்களும் சிறிது கற்பிக்கப்படுமாறு ஏற்பாடு செய்யப்படுகிறது. இம்மாதிரி ஸ்கூல்கள் டென்மார்க்கில் 80 இருக்கின்றன. மேற்கூறிய கவிவாணர் கிரண்ட்விக்கின் சிஷ்யர்களே இந்த ஸ்கூல்களின் டைரக்டர்களாயிருக்கிறார்கள். இப்பள்ளிக்கூடங்களில் இந்நகரத்துக் குடியானவர்களின் குமாரர்களும் குமாரிகளும் சேர்ந்து பயிற்சி பெறுகிறார்கள். பள்ளிக்கூடத்தில் வாசிக்கச் சம்பளம் கட்டவேண்டிய அவசியமிருப்பதனால், ஏழைக்குடியானவர்கள் வியவசாயக்கூலிகள் முதலிய சிலருக்கு இப்பள்ளிக்கூடங்களில் சேர்ந்து படிக்க முடிவதில்லை. ஆனால் அவர்களுக்கும் இம்மாதிரி பள்ளிக்கூடங்கள் இப்போது ஏற்பட்டிருக்கின்றன.

மனப்பயிற்சி பெறும் தன்மை.

இப்பள்ளிக் கூடங்களில், பூகோளசாஸ்திரம், சரித்திரம், டேனிஷ்பாஷை, இயற்கை சாஸ்திரம், ரசாயனசாஸ்திரம் இவைகளில் சிலவேளைகளில் பிரசங்க வாதங்கள் நடந்தேறும்; மாணவர்கள் இவ்வித பிரசங்கம் நடக்கும். மாரி காலங்களில் இப்பள்ளிக்கூடங்களுக்கு வந்து சில விவாதங்களைக்கேட்டு, மாணவர் வீட்டுக்குப்போய் சாவகாசமாய் நாட்டிலிருக்கும் புஸ்தகசாலைகள் சென்று அங்கு புஸ்தகங்களை வாசித்து, விசேஷமாய்த் தம் அறிவைப் பெருக்கிக்கொள்ளுகிறார்கள். ஒரே புஸ்தகத்தை நெட்டுருப்போட்டுத் தள்ளுவதைக் காட்டிலும் இம்மாதிரி பிரசங்கங்களினால் பிள்ளைகள் அடையும் நன்மை அதிகமென்பதே பள்ளிக்கூட ஸ்தாபகரின் அபிப்பிராயம். பள்ளிக்கூடம் இருக்கும் ஸ்தலவிசேஷங்களுக்குப் பொருந்தினாற்போல் வியவசாயப் பயிற்சியைப் போதகர்கள் செய்கிறார்கள்.

ஆசார்ய, சிஷ்யர்கள் நடந்துகொள்ளும் விதம்.

இப்பள்ளிக்கூடத்தை நடத்தும் டைரக்டர்கள், புரொபஸர்கள் மாணாக்கர்களை வெகு கடுமையாய் நடத்துவதேயில்லை. அதனால் அவர்கள் உபாத்தியாயர்களிடத்து மரியாதை தப்பி நடந்துகொள்வதுமில்லை. உபாத்தியாயர்கள் பையன்களுடன் கலந்து ஆஹாரங்கொள்வதும், பையன்கள் எப்பொழுதும் உபாத்தியாயர்களிடம் கூச்சப்படாமல் அணுகிச் சந்தேகம் தெளிந்து கொள்வதும் சகஜம்.

ஒரு சீமாட்டியின் அபிப்பிராயம்.

இப்பள்ளிக்கூடங்களை வந்து பார்க்க ஐரோப்பா தேசத்து மூலைமுடுக்குகளிலுள்ள கல்விமான்கள் பலர் அடிக்கடி இங்குவந்து போவார்கள். ஒரு பிரெஞ்சு சீமாட்டி டேனிஷ்பாஷையையும் அவர்களின் கல்வி முறையையும் கற்க இந்நாட்டுக்கு வந்தார். அவர் பார்த்தபடி 200-சிறு பெண்மணிகள் முதற்கொண்டு மேற்கூறிய பள்ளிக்கூடங்களில் பிரசங்கங்கள் பலவற்றை உற்றுக்கேட்டு மனத்திற் பதித்துக் கொள்வதைப்பற்றியும் அவர்கள் பாட்டுகளுடன் கூடிய தேகப்பயிற்சி செய்யும் முறையையும் வியந்து எழுதியிருக்கிறார்.

ஆஸ்கோப் யூனிவர்ஸிடி.

இந்த ஹைஸ்கூல்களில் படித்தபடிப்பை விருத்தி செய்து கொள்ள ஒருவர் விரும்பினால் இவர்கள் க்ரண்ட்விக்கினால் ஸ்தாபிக்கப்பட்ட ஆஸ்கோப் யூனிவர்ஸிடி சென்று படிக்க வேண்டும். இங்கேயே மேற்கூறிய ஹைஸ்கூல்களில் உபாத்தியாயராக வரக்கூடிய போதகர்கள் பழக்கப்படுகிறார்கள். இங்கு இயற்கை சாஸ்திரங்கள், கணித சாஸ்திரங்கள் முதலியன பல படிகளில் உயர்ந்தனவாய்ச் சொல்லிக் கொடுக்கப்படுகின்றன. இங்கு முதன்

முதலில் ரசாயன சாஸ்திரங்களில் ஆரம்பப் படிப்பைச் சொல்லிக்கொடுத்த பின் அந்த சாஸ்திரக்ஞர்களின் சரித்திரங்களையும், அவர்கள் உண்மை கண்டுபிடித்து உலகத்துக்கு உதவின விஷயங்களையும் நுணுக்கமாய்ச் சொல்லிக் கொடுக்கிறார்கள்.

முடிவுரை.

இப்படியாக டென்மார்க்கு தேசத்தில் வியவசாய வித்யாசாலைகள் ஏற்பட்டதனாலன்றோ அந்நாடு வியவசாயத்தில் உலகெங்கும் சிறந்த தேசமாக மதிக்கப்படுகிறது. கல்வியே விசேஷ சௌக்கியத்தைக் கொடுப்பது. எல்லாருக்கும் உயிர்போன்றது கல்வியே. "கல்வியி னூங்கில்லை சிற்றுயிர்க் குற்றதுணை." நம்முடைய நாட்டுப்புறவாசிகளுக்குக் கற்றுக் கொடுக்கும் கல்வி மிகவும் குறை நிறைந்திருக்கிறது. நம் கிராமாந்தரக் குடியானவர்கள் வித்யாபிவிருத்தியடைய வேண்டுமானால், நம் நாட்டில் கூட்டுறவு முயற்சி விருத்தியாக வேண்டுமானால், நம்நாட்டில் வியவசாயம் விருத்தியடைய வேண்டுமானால், இந்தியாவில் ஒவ்வொரு கிராமங்கள் குக்கிராமங்கள் தோறும் நாட்டுப்புறத்தார்க்கேற்ற வித்யாசாலைகள் ஏற்படுத்தப்பெறல் வேண்டும். டென்மார்க்கு என்னும் வியவசாய தேசம்போல் இந்தியா விருத்தியடைய வேண்டுமானால், நமது நாட்டுத் தேசாபிமானிகள் இலச்சுவான்தாரர்கள் தமது கவனத்தைத் தீவிரமாய்ச் செலுத்தி இதுவிஷயத்தில் உற்றதுசெய்ய உகந்துழைக்க வேண்டும்.

(மாடர்ன் ரிவியூவிலிருந்து தமிழ்ப் படுத்தப் பெற்றது.)

---

## "PEARLS OF FAITH"

SELECTED AND STRUNG TOGETHER FOR PARENTS AND CHILDREN TO WEAR.

(*From the Sayings of St. Vemanna.*)

ஆந்திரபாஷையில், பிரமக்ஞானியும், அருட்கவியுமாகிய,

வேமன்ன மகாகவி அருளிச்செய்த

பத்யங்கள்.

(*Second Series.*)

நீசர்குணம் எவ்விதத்தாலும் மாறாது.

17. ஏசறவே கற்றாலும் எத்தனைதான் கேட்டிடினும்
நீசர்குணம் மாறுவரோ நேரிழையே—தேசில்கரி
பால்விட் டலம்புகினும் பல்கால் அதன் கருமை
மேல்விட்டுப் போமோ விளம்பு.

(இ-ள்.) எவ்வளவுகல்விகளை ஐயம் திரிபறக்கற்றபோதிலும் சாஸ்திரங்களைக் கேட்டபோதிலும் கீழ்மக்களுடைய குணமானது மாறமாட்டாது. எப்படி யென்னில் அடுப்புக்கரியை ஆவின்பால்விட்டும் பலதரம் கழுவினபோதிலும் அதன் கருநிறம் அதை விட்டு நீங்காதவாறு போல.

போராதவேளைக்கு அற்பரும் கேடுதிசெய்ய வல்லவராவார்கள்.

18. அந்நாள் இலங்கை அழிந்தகால் வானரங்கள்
தன்னால் அழிந்ததுகாண் தன்பெருமை—முன்னிஒரு
கேடாரும் காலைக் கெடுக்க வலியில்லாக்
கூடாரும் போதுமெனக் கொள்.

(இ-ள்.) முன்னாளில் இலங்கைமாநகர் அழியவந்தபோது அற்பமாகிய குரங்குகளாலன்றோ பெருமையழிந்தது. ஆதலினாலே நமக்குக் கெடுதிவரக்கூடிய துக்காலத்தில் நம்மைக்கெடுப்பதற்கு எவ்வளவு வலியற்ற சத்துருவும்போதும்.

கேடுவருமுன்னே மதி கெட்டுவரும்.

19. கானகத்தே காரிகையைக் கைவிட்டுப் பொன்மயமாம்
மானதனைப் பின்தொடர்ந்த வள்ளலினும்—ஞானம்
முதிர்ந்தார் எவருள்ளார் முன்னம்வரக் கேடு
பதிந்தமதி கெட்டுவரும் பார்.

(இ-ள்.) காட்டில் தன் மனைவியைத் தனியேவிட்டுப் பொன்மானைத் தொடர்ந்து சென்ற ஸ்ரீராமபிரானினும் அறிவு முதிர்ச்சியுடையார் உலகில் யாவர். அவருக்கும் அப்போது மதிகெட்டுப்போனமையாலே கேடுவருமுன்பு மதி கெட்டுப்போகும் என்னும் உண்மை எத்திறத்தாருக்கும் உரியதேயாம்.

நல்லாரிலும் பொல்லாரே மிகுதியாவர்.

20. நல்லார் கிடைப்பரியார் நாடெங்கும் தேடுகினும்
பொல்லார் அளப்பிலராற் பூமிசையே—வில்லாரும்
நன்னுதலாய் மண்போல் அகப்படுமோ நானிலத்தில்
பொன்னதுதான் உண்மை புகல்

(இ-ள்.) உலகமெங்கும் வருந்தித் தேடினாலும் நற்குணமுடைய மேலோரைக் காண்பதரிது பொல்லார்க்கோ அளவில்லை. இது சகஜதர்மமேயாம். எப்படி யென்றால் மண்ணைப்போலப் பொன் சுலபத்தில் கிடைக்கின்றதா. இல்லையே அதுபோலவே என்றறிதல் வேண்டும்.

அன்போடளிப்பது சிறிதளவேயாயினும் சிறந்ததாம்.

21. ஆவின்பால் முட்டையள வாயிடினும் சீர்மைத்தாம்
பாவாய் குடம்கழுதைப் பாலெதற்காம்—மேவுமளத்
தன்பொடுகை யன்னம் அளித்திடினும் சீர்மைத்தாம்
என்பயனா மிட்ட பிற.

(இ-ள்.) விசுத்தமாகிய பசுவின்பால் முட்டையளவேயானாலும் மேன்மைபாகும். அஃதன்றி அசுசியாகிய கழுதைப்பால் குடம்பாலையீந்தும் பயனென்ன. யாவர்கொள்வார்கள்! அதுபோல பிரீதியோடு இடும் அன்னம் பிடியளவேயாயினும் சிறந்ததாகும். அன்பில்லாமல் வெறுப்போடு வயிறார அளித்து பிரயோசனமென்ன

நடைப்பிணமாவான் இன்னனெனல்.

22. தேடான் அளித்தறியான் தின்பனவும் தின்னனல்
ஆடையணி கல்லான் அறிவில்லான்—நீசுகலை
ஞானமுமில் லானை நடைப்பிணமென் றேயுலகில்
மானவர்தாம் வைப்பார் மதி.

(இ-ள்.) பொருளை நல்வழியாலே சம்பாதிக்காமலும், சம்பாதித்த பொருளை நல்வழியிற் செலவு செய்யாமலும், தானும் உண்பனவற்றை உண்ணாமலும் உடுப்பனவற்றை உடுக்காமலும், விவேகமில்லாமலும் வேதசாஸ்திரங்களை அப்பியசிக்காமலும் இருப்பவனை இவ்வுலகில் நடைப்பிணமாகவே எண்ணுவார்கள்.

சத்புருஷர்களுக்கன்றித் தீயாருக்குச்செய்யும் உபகாரம் வீணாகும்.

23. நல்லார்க்குச் செய்தவொரு நன்றி யணுவெனினும்
பல்லா யிரமாகப் பாவிப்பார்—அல்லாத
அற்பருக்குக் குன்றத் தளவே புரிந்திடினும்
வைப்பர்கொலோ தங்கள் மனம்.

(இ-ள்.) நற்குணமுடையாருக்குச் செய்த உபகாரம் சிறிதேயாயினும் அவர்கள் அதை மிகப் பெரிதாகப்பாவித்து நன்றிபாராட்டுவார்கள். தீக்குணமுள்ள அற்பருக்குச் செய்த உபகாரம் மலையளவேயானாலும் அதை அணுவளவாகவேனும் பாவித்து நன்றி பாராட்ட மாட்டார்கள்.

வஞ்சகர்களுக்கு எவ்வளவு போதித்தாலும் நற்குணம் வரமாட்டாது.

24. பாலோடு சீனி படுத்திச் சமைத்தாலும்
ஏலாத எட்டி இனிக்குமோ—மாலாரும்
வஞ்சகர்தம் நெஞ்சில் வருமோ அருங்குணம்தான்
செஞ்சளது செய்திடினும் செப்பு.

(இ-ள்.) பாலும் சீனியும் வேண்டுமட்டும் சேர்த்துப்பதமாகச் சமைத்தபோதிலும் எட்டிக்காய்க்கு இனிப்புண்டாகுமோ. ஆகாதன்றோ. அதுபோல மயக்கமுடைய வஞ்சகர் மனசில் எவ்வளவுதான் போதித்த போதிலும் நற்குணங்கள் உண்டாகுமா ஒருபோதும் உண்டாகா.

விலைமாதர் மனத்தில் அன்புண்டாகமாட்டாது.

25. விலைமாதர் உள்ளத்தே மேவாதாம் காதல்
அலைதொன் றடைந்திடினும் ஆங்கு—நிலையாது
பல்லோர்செல் பாதை முளையா முளைத்திடினும்
நில்லாது நீங்கிவிடும் புல்.

(இ-ள்.) வேசையர் மனத்தில் அன்பு தோன்றமாட்டாது. ஒருவேளை தோன்றினாலும் அவ்வன்பு நிலைத்து நிற்கமாட்டாது. எதுபோலென்னில் பலரும் நடந்து செல்லுகின்ற பாதையில் புல் முளையாது. ஒருவேளை முளைத்தபோதிலும் நெடுங்காலம் நில்லாது. சீக்கிரத்தில் அழிந்துபோகும். இது போலாம்.

மனம்செல்கின்ற வழியேபுலன்களும்செல்லும்.

26. உள்ளம் செலும்வழியே ஓடும் புலனெல்லாம்
கள்ளமின்றி நெஞ்சம் கடவுளடி—நள்ளுமெனில்
ஐம்புலன்கள் தாமும் அதையே யடைந்திடுமால்
பின்பொரிடம் சாராவாம் பேர்ந்து.

(இ-ள்.) மனம் எந்த வழியாகச் செல்லுகின்றதோ அந்தவழியே இந்திரியங்களும் செல்லும். ஆகையினாலே மனத்தை விஷயங்களிலே செலுத்தாமல் நிக்கிரகித்துக் கடவுளின் திருவடிகளில் செலுத்தினால் இந்திரியங்களும் அவ்வாறே அத்திருவடிகளிலேயே செல்லும். வேறோரிடத்தும் செல்லாது.

அறமொன்றே மறுமைக்குத் துணையாவது.

27. தநுவைத் துறந்தாவி தான்செல்லும் போது
மனைவிசுதர் சுற்றமுடன் வாரார்—தனிவழியே
ஏகு முயிர்க்குத் துணையாக எய்துவது
சேகிலறன் ஒன்றே தெரி.

(இ-ள்.) உடலைவிட்டு உயிர்பிரிந்து போகும்போது மனைவிமக்கள் சுற்றத்தார் என்பவர்களில் ஒருவரேனும் உடன்வரமாட்டார்கள். அப்போது தனிவழியே செல்லுகின்ற உயிருக்குத் துணையாக வருவது தான் செய்த புண்ணியம் ஒன்றேயாகும்.

ஆசையை நீத்தவனே யோகியவான்.

28. செம்பொன்னும் ஓடுமொரு சீராகச் சிந்தித்தே
அம்புவிழி யார்மயக்குள் ஆகாதான்—இம்பரிடை
மாயோகம் சாதிக்கும் வல்லோர்கள் தங்களினும்
தூயோனாச் சொல்லப் படும்.

(இ-ள்.) ஓட்டையும் பொன்னையும் ஒன்றாகப்பாவித்து மாதர்மேல் ஆசைவையாதவன் எவனோ அவன் யோகசமாதியில் இருக்கும் மகாயோகியைக்காட்டில் உயர்ந்தோனாகச் சொல்லப்படுவான்.

தேகம் அழியுமன்றி ஆன்மா அழியாது.

29. வானிடத்தே வானடையும் மண்ணிடத்தே மண்ணடையும்
ஊனெடுத்த ஆவி ஒழியுங்கால்—தேனடுத்த
சொல்லாய்நீர் தீவளிதாம் தோயமொடு தீவளியிற்
செல்லும்உயிர் நிற்கும் தனி.

(இ-ள்.) தேகத்தோடு சேர்ந்திருக்கும் ஆன்மாவானது இதனை விட்டு நீங்கும்போது பஞ்சபூதத்தாலாகிய தேகத்தின் கண்ணுள்ள பிருதிவியின் கூறு பிருதிவியோடும் அப்புவின் கூறு அப்புவோடும் தேயுவின்கூறு தேயுவோடும் வாயுவின்கூறு வாயுவோடும் ஆகாசத்தின் கூறு ஆகாசத்தோடும் கலந்து போக ஆன்மா இப்பூதங்களுக்கு அந்நியமாதலாலே அவற்றோடு கலவாமல் சேஷித்து நிற்கும்.

சிரவணமனனங்களாலே ஞானத்தைப்பெறவேண்டும்.

30. சொல்வார்சொற் கேட்டுத் துகளறவே ஆராய்ந்து
நல்வகையின் உண்மை நலம்தெரிவான்—வில்வளைய
வாங்கினுல் அன்னமெழில் வாணுதலாய் வாய்ந்திடுவான்
தீங்கிலா ஞானமெனத் தேர்.

(இ-ள்.) வேதசாஸ்திரங்களில் வல்லவர்களாயுள்ள பெரியோர்களையடுத்து அவர்கள் சொல்லும் விஷயங்களை நன்ருகக்கேட்டுப் பின்னர் கேட்ட விஷயங்களை நன்ருக ஆராய்ச்சி செய்து பதார்த்தத்தை அறிகின்றவன் மெய்ஞ்ஞானத்தை யடைவான்.

பகுத்தறிவாலே பாவத்தினீங்கிச்சுகம்பெறலாகும்.

31. தீபமில்லா இல்லிற் றெரியாது தீபம்போல்
தாவில் பகுத்தறிவு தான்பெற்றும்—பாவமெனும்
வெய்யவிருள் ஆருநெறி வீழ்ந்தங்கு வீணேநீ
நைவதுதான் என்னே நவில்.

(இ-ள்.) தீபமில்லாத வீட்டில் இருள்மூடியிருத்தலின் ஒன்றும் தெரியாது. தீபத்தை ஏற்றி வைத்தபின்னும் அவ்விருள் நீங்காது நிற்குமோ? ஆதலால் புறத்திருளை நீக்கும் தீபம்போல அஞ்ஞான மாகிய அகத்திருளை நீக்குதற்கு விவேகமாகிய தீபத்தைப்பெற்றிருந்தும் கையில் விளக்கிருக்கவும் நெறியறியாமல் குழியில் வீழ்வார்போல நீ ஏன் பாவமாகிய இருளில் திரிந்துழலவேண்டும். விவேகத்தாலே தீவினையில் நீங்கி நல்வினைபுரிந்து சுகம் பெறலாகாதோ.

சத்தியமும் ஞானமுமே மேலோர்க்கு லட்சணம்.

32. வாய்மையுள்ளார் பாலாய் வளரும் பிறங்கறிவு
தூயவறி வுள்ளார்பாற் றோன்றிடுமே—வாய்மையது
வாய்மையும் சீரார் மனத்தறிவும் உள்ளாரே
ஆய்வுறு மேன்மக்கள் அறி.

(இ-ள்.) சத்தியமுள்ளாரிடத்தில் ஞானமுண்டாகும். ஞானமுள்ளாரிடத்தில் பரிசுத்தமாகிய சத்தியம் உண்டாகும். இவ்வாறு ஒன்றையொன்று அடுத்திருப்பனவாகிய ஞானம் சத்தியம் ஆகிய இக் குணங்களை உடையாரே மேன்மக்களாவார்கள்.

SHORT STORY.

## SILENT REFORM:

AN OLD WAY OF SOLVING NEW PROBLEMS.

"Close your lips and let your hearts open. Work out the salvation of this land and of the whole world each of you thinking that the entire burden is on your shoulders."—*Swami Vivekananda.*

## "திரைகடலோடியுந் திரவியந்தேடு."

(ஒரு சிறுகதை.)

இராமசச்ந்திரய்யர் தனக்குக் கல்யாணமான மறு வருஷத்திலேயே தன் மாமியார் பார்வதியம்மாள், பத்னி' தங்கம்மாள், இவ்விருவரையும்கும்பகோணத்திலுள்ள தன் வீட்டிலிருக்கும்படி ஏற்பாடு செய்துவிட்டு தான் மாத்திரம் படிக்கப் பட்டணஞ் சென்றிருந்தனர். பட்டணத்தில் எம். எல். பரிக்ஷைக்கு வாசிக்கும்பொழுது அவர் மாதம் ஒன்றுக்கு நூறு ரூபாய் சம்பளமுள்ள ஓர் வேலையிலமர்ந்தனர். இராமச்சந்திரய்யர் மிகுந்த பணக்காரர். பட்டணத்திலிருந்து மாதந்தோறும் ரூபாய்-60 கும்பகோணத்துக்கு அனுப்பிக்கொண்டிருந்தனர். அவர் அடிக்கடி ரஜாகாலங்களில் கும்பகோணத்துக்கு வந்து போய்க்கொண்டு மிருந்தனர். தங்கம் மிகுந்த புத்திசாலியும், கல்வி பயின்றவளுமாதலால் அவள் ஏற்பாட்டின் படிக்கே கும்பகோணத்தில் சிறப்பாய் வீடுகட்டி முடிந்தது. வீடுகட்டிமுடிந்து கடைசியாகப்பட்டணத்திலிருந்து வந்த நமதய்யர் இரண்டு வருஷகாலமாய் கடிதமெழுதாமலும், போகுமிடஞ் சொல்லாமல் பட்டணமே போவதாய்ச் சொல்லிப்போனவர் வெங்கட்ரமண சுவாமி சமாராதனை நடந்த அன்று காலமே தான் தன் பரிசாரகனுடன் தஞ்சை நகரத்திலிருந்து வந்து சேர்ந்தனர். வந்தது தான் தாமதம், சுவாமி காரியத்திற் கெத்தனஞ் செய்தனர். அவருக்கு இன்ன உத்தியோகமென்பதை தங்கம்மாளாவது அல்லது அவள் தாயார் பார்வதியம்மாளாவது தெரிந்துகொள்ளப் பதட்டப்பட்டவர்களாயிருக்கவில்லை. ஆனால் ஏதோ பெரிய உத்தியோகம் கிடைத்திருக்கலாம் என ஊகித்தார்கள். நல்லபடியாய் வீட்டிற்கு வந்து சேர்ந்தாரே என்று திருப்தி யடைந்தவர்களா யிருந்தார்கள். சமாராதனை முடிந்தது. வீட்டிலுள்ள எல்லோருக்கும் போஜனமாய் விட்டது. இராமச்சந்திரய்யர் வெளித்தாழ்வாரத்தில் கிரிமினல் தரப்புக் கேஸ்களை பைசல் செய்துக்கொண்டிருக்கிறார்.

இரண்டு வருஷகாலமாய் ஒரு மனுஷனைப் பற்றி யாதொரு சமாசாரமும் தெரியாமல், அல்லது தெரிந்துகொள்ளப் பிரயத்தினப் படாமல், தங்கம்மாளாவது, பார்வதி யம்மாளாவது எப்படி யிருந்திருக்கலாம் என்று சிலர் சந்தேகிக்கலாம். கும்பகோணத்தில் தன் வீடு கட்டிமுடிந்து கடைசியாக வந்த நமதய்யர் அவர்கள் தன் பத்னியைப் பார்த்து, "அடி தங்கம்! நான் பட்டணத்தில் இன்னுஞ் சிலகால மிருக்கவேண்டியிருக்கிறது. வர ஒரு வருஷம் செல்லும், அதற்குமேலுஞ் செல்லும்; என்னைப்பற்றிய கவலை உங்களுக்கு வேண்டாம். கடிதம் எழுதவும் எனக்கு முடியாது, நேரமுமிராது. நீங்களும் நான் போகுமிடம் வரவும்கூடாது. காரணமும் என்னைக் கேட்கக்கூடாது. சுகமாய் யாதொரு கவலையுமின்றி இவ்விடத்தில் நீங்கள் வசிக்க எல்லாவித சவுகரியங்களும் செய்யப்பட்டிருக்கிறது. என் வார்த்தையை மீறி நடப்பீர்களேயானால் நீங்கள் என்னை இழந்தவர்களாவீர்கள்" என்று கண்டிப்பாய்ச் சொல்லிப் போயிருந்தபடியால், மனதில் விசாரமிருந்தாலும், அவர்கள் சுவாமியை வேண்டிக்கொள்ளுதலைத் தவிர வேறொன்றுஞ் செய்வதற்கில்லாமல் அவர் புறப்பட்டுப்போன தினமுதல் ஒவ்வொரு தினத்தையும் ஓர் யுகமாகவே கழித்து வந்தார்கள்.

இராமச்சந்திரய்யர் கச்சேரி செய்யும் தோரணையைக் கண்டானந்தங்கொண்டு, தங்கம்மாள் தாயாரிடம் உள்ளே சென்றதை முன்னமே நாம் பார்த்தோம். அப்பொழுது தங்கம்மாள், "அம்மா! நமக்கு தெய்வானுகூலம் பூர்த்தியாக விருக்கிறதென்பதற் கையமில்லை. உன்

மாப்பிள்ளைக்கு நம்ம தஞ்சாவூர் ஜில்லா கலெக்டர் உத்தியோகமாம்." என்று தன் தாயாரைப் பார்த்துச் சொல்லிக்கொண்டே ஆநந்தக் கண்ணீர் பொழிந்தாள். பார்வதியம்மாள், தன் மகளை நோக்கி, "சரிதானடி உன் அம்மான் சேசன் பிள்ளையின் உபநயனத்தின்போது தானே, அவனுடைய அகத்துமேலே உன் ஆம்படையானை (அகமுடையானை) முதல் முதலில் பார்த்தோம்: உன் மாமா சேசனும் அந்தப்பிள்ளையைப்பற்றி, அவன் பி. ஏ. பரிக்ஷைக்கு வாசிக்கிறான், புத்திசாலி, சொத்தும் இருக்கிறது தக்கவரன் தான், நம்ம குழந்தையை (உன்னை)க் கொடுத்தால் சுகப்படுவள் என்று சொன்னான். நீயும் அந்தப்பிள்ளைக்குத் தான் வாழ்க்கைப்படுவதாய்ச் சொன்னாய்; ஈசுவர சங்கல்பத்தின்படி நடந்தது. இனி நீங்கள் அகமுடையான் பொண்டாட்டியுமாய் குஞ்சு குழந்தைகளைப் பெற்றுக்கொண்டு எங்கேயாவது சுகமா யிருக்கவேண்டியது என்ற ஒரு கோரிக்கைதான் எனக்கு." என்றாள்.

அப்பொழுது அங்கிருந்த கெடியாரத்தில் மணி மூன்றடித்தது. தங்கம்மாள் பால் போளியில் இரண்டும், ஒரு 'தம்ளர்' காபியும் எடுத்துக்கொண்டு, தன் கொழுநன் சட்டை போட்டுக் கொண்டதாய் முன் சொன்ன அரையில், 'டிபன்' தயாராக இருப்பதாய் பரிசாரகப் பையன் மூலமாய்த் தெரிவித்துவிட்டு தான் தன் பர்த்தாவின் வரவை எதிர் பார்த்தவளாக, தாழ்வாரத்தில் கச்சேரி செய்யும் தன் கணவனுடைய முகாரவிந்தத்தை தன்னை யாருமறியாத வண்ணமாய்ப் பார்த்துக் கொண்டிருந்தனள்.

குழந்தை இராமச்சந்திரன் கச்சேரி செய்யும் விமரிசையைப்பற்றி இங்கெடுத்துக் கூறல் அவசியம். இளம்வயதானாலும் அவன் கட்சிக்காரர்களிடத்தில் ஜீவகாருண்ய முள்ளவனாய் நியாயத்தை யறிந்து, துஷ்டர்களை நிக்ரகஞ் செய்தும், சிஷ்டர்களைப் பரிபாலனஞ் செய்தும் வருவதில் அதி சமர்த்தனாகக் காணப்பட்டான். அவன் கட்சிக்காரர்களிடம் காட்டும் அன்பு வியக்கத்தக்கதாயிருந்தது. பிறர் பொருளுக்குப் பேயாய்ப் பறக்காமல், பாரபக்ஷமென்பது அணுவளவேனு மின்றி எல்லாருக்கும் நல்லவனாய் நடந்து வந்தான். செல்வத்திலாயினும், கல்வியிலாயினும், உத்தியோகத்திலாயினும், அழகிலாயினும் நமது இராமசந்திரன் செருக்குற்றிலன். இக்காலத்தில் பெரும்பான்மையோர் தமக்குச் செல்வம் வந்துற்றபோது தெய்வத்தைக் கனவிலும் நினையாமலும், உறவினரை மதியாமலும், சொல்வன வறிந்து சொல்லாமலும், தம் துணைகளை நோக்காமலும், எவ்விதத்திலாயினும் பிறர் பொருளைக் கவருவதிலேயே சித்தத்தை நாட்டியவர்களாய், தம்மனதார இது நியாயம், இது அநியாயம் என்று தெரிந்திருந்தாலும் அநியாயமான வழியிலேயே மனதைச் செலுத்தி தம்முடைய துஷ்ட எண்ணத்தின்படிக்கே நடக்க முயன்று, வெம்பகையை வலிதென்றெண்ணாமலும், இருக்கின்றனர். செல்வச் செருக்குற்றவர்கள் தம் செல்வம் நிலையாமை என்றுணராமலே நல்லொழுக்கினரைத் தூயவொழுக்கின ரென்றுரைக்கவும் புல்லொழுக்கினரை தூயபுலத்தரென்றுரைக்கவும் செய்வதுமல்லாமல் நல்ல பதிவ்ரதா தர்மத்தைக் கைக்கொண்ட குலஸ்திரீகளை யஞ்சாமல் கெடுக்கவும் பல்வகைத்தான துயரத்தை வலுவிற் சம்பாதிக்கவுஞ் செய்கிறார்கள். அப்படிக்கெல்லாமின்றி இராமசந்திரன் கச்சேரி ஓர் நீதிஸ்தானமாயிருந்தது.

அன்று கோர்ட்டு முடிந்ததும் நமது அய்யர் உள்ளேவர எழுந்தனர். அதையறிந்த தங்கம்மாள் பலகணியை விட்டுச் சரேலென்று விலகி வந்து தன் கொழுநனை எதிர்நோக்கினவளாக அங்கு சுவற்றில் வைத்திருக்கும் விதம் விதமான இரவிவர்மாவின் படங்களை உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தனள், அந்த அரைக்

குள் வந்த அய்யரோ ஓர் ஜோதியின் வடிவமாய் அங்கு தோன்றிய தன் பிரிய பத்னியைப் பார்த்தும், தன் சேவகனை கைப்பெட்டியை உள்ளே வைத்துப்போகச் சொல்லி, தன்க்குள்ளேயே 'உலகத்தில் நான் ஒருவனே பாக்கியவான், கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி,'' என்றபடி, இவள் எனக்குப் பணிவிடை செய்வதிலேயே நோக்கமுடையவளாகக் காணப்படுகிறாள். மேலும் முதல் முதலில் ஆலங்குடி அக்கிரகாரத்தில் யாமா சேஷய்யர் வீட்டில் இப்பெண்மணியைப் பார்த்தபோது என்மனதும் இவள் மனதும் ஒற்றுமைப்பட்டு எங்களிருவர் கண்களும் ஓர் நிமைப்பொழுது சந்தித்தன; அத்தருணத்தில் இல்லிற் கிசைந்தொழுகும் பெண் இவள் என்றே தீர்மானித்து மணம் புரிந்தோமே. அது இன்று சபலமாயிற்று;'' என்று நினைத்துப் பூரித்துக்கொண்டே தன் கச்சேரி உடைகளைக் களைந்துகொண்டிருக்கையில், படங்களைப் பார்த்துக்கொண்டிருந்த தங்கம், புருஷனைக்கண்டு திடுக்கிட்டு நாணி அவரை நோக்கித், ''தங்கள் உத்தியோகத்தை எனக்குச் சொல்லத் தங்களுக்குப் பிரியமில்லாமற் போனாலும், சேவகன் பில்லைக்காவது இரக்கம் வந்ததே' என்று மறுபடியும் சொல்லிக் குறிப்பிட, அவர் அவளை இறுகப்புல்லினர். தத்தம் விருத்தாந்தங்களை ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டனர். அங்குள்ள பழவர்க்கங்களை ஒவ்வொரு தினுசாகக் கணக்குப்பார்க்க ஆரம்பித்தனர். அப்பொழுதோர் தந்தி வந்தது. அய்யர் உடனே அதைப் பிரித்து வாசித்தனர். ''நாம் எல்லோரும் பட்டணம் போகவேண்டு'' மென்றனர்.

தங்கம்மாள்:– 'அங்கென்ன விசேஷம்!'

அய்யர்:—கெவர்ன்மெண்டு ஆபீசில் 'அண்டர் செக்ரடிரி' (உதவிகாரியதரிசி) யாக என்னை நியமித்து இருக்கிறார்கள். இந்த தந்திசமாசாரம் வருமென எனக்கு முன்னமே தெரியும்.'

தங்கம்மாள்:—'' பிராணநாதா! 'இந்தியன் சிவில் சர்விஸ்' பரீக்ஷை தேறினவர்களுக்கன்றி இந்த உத்தியோகங்கள் கிடைப்பதில்லை என்று தாங்களே முன்னொருகாலத்தில் கூறியிருப்பதாக என் ஞாபகத்திற்கு வருகின்றதே.''

அய்யர்:—'' அடி என் கண்ணே! நீ சொல்லுவது நிஜமே. நானும் மற்றுஞ் சிலருடைய உதவியினால் சீமைக்குச் சென்று மேற்படி பரிக்ஷையில் தேறினேன். நான் சீமைக்குப் போவது உங்கட்குத் தெரிந்தால் அதற்கு எதாவது இடையூறு நேரிடும் என்றேதான் உங்கட்குச் சொல்லாமல் கடிதம் கூட எழுதாமல் சென்றேன்.''

தங்கம்:—'' சீமை என்றால் இங்கிலாண்டு தேசந்தானே?''

அய்யர்:—'' ஆம்.''

தங்கம்:—'' அங்கு செல்லலாமோ நாம்?''

அய்யர்:—'' என் சென்றாலென்ன?''

தங்கம்:—'' கடல் யாத்திரை செய்யக்கூடாது என்று சில பெரியோர்கள் சொல்லுகிறார்கள் என்றுதான்—''

அய்யர்:—'' ஏது? நீகூட சுத்த பைத்தியக்காரியாக விருக்கிறாய்; முன்னாளில் பெரியோர்கள் கடல் யாத்திரை செய்யாமலா பிரபஞ்ச உற்பத்தியைப்பற்றி புத்தகமாக பூகோள சாஸ்திரமென்று எழுதியிருக்கிறார்கள்? இக்காலத்தில் ஐரோப்பியர்கள் தாம் சென்று பார்த்தவரையில் பூகோளம் (Geography) எழுதியிருக்கிறார்கள். கடல் பிரயாணஞ்செய்து வந்தவர்களை எல்லாம் என்னடி பண்ணி விட்டார்கள்?''

தங்கம்:—'' பண்ணுகிற திருக்கட்டும்! ஆளுக்குத் தக்கினப்போல சமயத்திற் கேற்றதாயுள்ள விதிகளைத்தானே நம் பெரியோர்கள் கூறியிருக்கிறார்கள்?

அய்யர்:—'' ஆம் அடி ஆம். பணமிருந்தால் ஒன்று; பணமில்லாவிட்டால் ஒன்றுதான்: இன்று பகல் நம்ம சமாராதனைக்கு எத்

தனே கனபாட்டிகள், சஸ்திரிகள் வந்திருந்தார்கள்! யாராவது மூச்சுவிட்டார்களா? உன் தோழி மீனாக்ஷி பரமசாதுவாயிற்றே, ஸ்த்ரீதர்மங்களை நன்குணர்ந்தவள், "கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை,' என்றபடி, அவள் தன் புருஷனுக்கடங்கி, அவன் மனங்கோணாது இசைந்தொழுகி அவன் எப்படிப்பட்டவனாக விருந்தாலும் அவனையே தெய்வமென மனதார நினைத்து அவனை மேன்மையாகவே கொண்டாடி வந்தனள். மேலும்,

"கோதில் கற்புடையார் தம் கொழு நர்பால்
காதல் கூர்த்து களிமகி ழெய்துவார்."

என்றவாறு அவனிடம் மிக்க அன்பு பாராட்டி வந்தனள்; அத்தகைய புண்ணியவதியைக்கண்டு காமுற்று கெட்ட எண்ணங்கொண்டலைந்த சிலர் தம்முடைய முயற்சியால், அவள்மேல் ஓர் அபாண்டமான அபவர்த்தத்தை யுண்டுபண்ணியும் ஸ்ரீமந்தத்தைக்கூட நடக்க ஒட்டாமல் பண்ணியும் என்னென்னவோ கூத்தடித்தார்கள், கருத்தட்டாங்குடியில் நாலைந்து வருஷத்துக்கு முன்னே. அவள் பாவம்! கண்ணீர் விடாத குறைதானே! அவளைக் கொண்டவனோ சொல்லவே வேண்டாம்: சுத்த தடியன், அப்பாவி வாயில்லாப்பூச்சி! அவனுடைய அண்ணன்மார்களும், ஒரு தம்பியும் மானமென்பதையே சித்தமாய்க் களைந்தவர்கள்! தகப்பனாரோ தள்ளாத கிழவர், பயந்தவர், நல்ல வித்வான். அவரால் என்னசெய்ய முடியும்? அவர் தன் சிஷ்யனைநம்பி அப்பொழுது மோசம்போனார். ஆயினும் தன் சம்பந்தி (மீனாக்ஷியின் சிறிய தகப்பனார்)யை வைத்துக்கொண்டு கிரியாலோபமில்லாமல் முகூர்த்தத்தை நடப்பித்தனர். ஆயிரமிருந்தாலும் பெற்றமனமோ அல்லவோ? ஊரில் சிலதலையாட்டிகள் செய்த நிர்ப்பந்தத்தினால் மீனாக்ஷியையும், அவள் அகமுடையானையும் மீனாக்ஷிபிரசவித்து க்ஷேமமாகவிட்டு, என் தோழனும், அந்த அக்கிரகாரத்தில் பெரியாத்துக்காரனுமான கோபாலன், மேற்கே சென்னிமலை என்ற ஊரில் கொண்டுவிட்டு ஏற்பாடு செய்துவிட்டு வந்தான். அவர்களுக்கென்ன குறைந்துபோயிற்று. இப்போது ஊரைவிட்டுப்போக நேர்ந்த பேதையர்களான அவர்களுடைய மனக்கொதிப்பு வீணில்போகுமா? அந்தத் தலையாட்டிகள் கொட்டம் ஒவ்வொன்றாய் அடங்கிக்கொண்டு வருகிறது.

தங்கம்மாள்:—"கிழவருடைய சிஷ்யன் ஆர்? உங்கள் தோழனுடைய வீட்டில் (பெரிய வீட்டில்) தேவதார்ச்சனை செய்கிறாரே அவர்தானே?"

இராமச்சந்திர:—"ஆம் அடி ஆம், அந்த ஆஷாடபூதிதான்."

தங்கம்:—"அவரை எல்லாரும் ஆஷடாபூதி என்பதேன்?"

இராமச்சந்திர:—"அவன் மகாவேஷதாரியாயிற்றே. 'படிக்கிறது திருவாசகம் இடிக்கிறது சிவன்கோயில்' என்றொரு வசனமுண்டு. அந்த மாதிரி அவன் வெளிவேஷதாரியேயல்லாமல் உள்ளே நுழைந்து பார்த்தால் சர்வ ஆபாஸந்தான். அவனைப்பற்றி சொல்லப்புகின் விரியும். பின் ஒரு சமயத்தில் கூறுகிறேன்.

தங்கம்மாள்:—"மீனாக்ஷி அகமுடையான்கூட தன்னைச் சில தலையாட்டிகள் அவமதித்துப் பேசி அவமானம் பண்ணியதாய் அவதூறு குற்றத்தில் கலெக்ட்டர் துரையிடம் பிராது கொடுத்தாராமே; அவருக்கு சாதகமாய் கூடச்சென்ற அவருடைய தம்பி, மச்சினன் (தங்கைபுருஷன்) முதலிய அவருக்கு இரத்த சம்பந்தமாயுள்ளவர்களே எதிரிகளிடம் பொருளே பெரிதென்று தம்மானத்தைக்கூடச் சற்றும் பாராதவர்களாய்ப் பரிதானம் வாங்கிக்கொண்டு, அவரைக் கைநழுவ விட்டு நாகப்பட்டணத்திலிருந்தபடியே படகிலேறி வேதாரண்யம் சென்றார்களாமே!

இவ்வாறு அவர் வஞ்சிக்கப்பட்டு நாகை நடுத்தெருவில் திண்டாடிவந்து சேர்ந்தாராமே! அவர்பாடு மண்குதிரையை நம்பி ஆற்றிலிறங்கிய கதையாகத்தான் ஆயிற்று. பணத்தையே பெரிதாய் நினைத்தார்களேயல்லாமல் மானத்தைக் கொஞ்சமும் கருதினார்களில்லை. பண ஆசையினாலேயே நல்ல நல்ல கௌரவமான இந்து குடும்பங்கள் சீரழிந்து போகின்றன.

இராமச்சந்திரன்:—இந்தக் காலத்தில் யாருக்கு யார் "பருத்திப் பொதியினைப் போலே வயிறு பருக்கத் தங்கள் தருத்திக்கு அறுசுவை போடுகின்றார்" என்றபடி, எல்லாம் தம்தம் வயிறு நிரம்பினால் சரி! மானமேது, அவமானமேது? பாழு முலகம், சரியானபடி பாரபக்ஷ மில்லாமல் விதாயங் கூறுவோருமிலர். கலி பெருத்ததொன்றோ? சந்தியாவந்தனம் சரியாய்ப் பண்ணுகிறார்களா? சிலராவது பஞ்சபாத்திர ஜலத்தைக் கொட்டுகிறார்கள் என்று சொல்லலாம் அதுவுமில்லாமலெத்தனை பேரிருக்கிறார்கள் தெரியுமா? இதைக் காட்டிலும் கொடிய பாபம் வேறென்ன வேண்டும். இதற்கு விதிகூறி—கண்டனை தண்டனைகளைச் செய்பவர்களற்றது; சிலர் சாஸ்திரிகளென்று வெளிக்கு மாத்திரம் விபூதி பூசியும், ருத்திராக்ஷ மாலைகளணிந்தும் டம்பமாய்த் திரிகிறார்கள். காரியத்தில் ஒன்றுமில்லை. சர்வவிகாரந்தான. அவர்களை ருத்திராக்ஷப் பூனைகளென்றே சொல்லலாம். சேணியனுடைய நூலை வாங்கி யஜ்ஞோப வீதம் செய்துவிற்கத் தலைப்பட்டுவிட்டார்கள். கேள்வி முறையில்லை. இன்னும் இங்கெழுதத்தகாத எவ்வளவோ அக்கிரமங்கள் செய்யத் துணிகிறார்கள். அவைகளுக்கெல்லாம் என்ன செய்து விட்டார்கள்? நான் சீமைக்குப்போனதில் தான் வந்து விட்டதோ! நாம் எப்போதும் ஈசுவரனுக்குப் பயந்து மனச்சாட்சிக்கு விரோதமில்லாமல் நல்ல வழியில் நடத்தலே போதுமான தருமமாகும். எத்தனையோபேர்கள் சீமைக்குச் சென்று மேற்கூறிய பரிக்ஷையில் தேறுகிறார்கள். அந்தப் பரிக்ஷையை இனி இந்தியாவிலேயே வைக்கப்படவேண்டு மென்றும், சுதேசிகட்கு கலெக்டர், ஜட்ஜி முதலான பாரி உத்தியோகங்கள் கொடுக்கப்பட வேண்டுமென்றும் 'காங்கிரஸ் சபையாரின்' தீர்மானங்களில் ஒன்று கோறுகிறது. இனி அந்தமாதிரி அனுஷ்டானத்துக்கும் வந்தாலும் வரலாம் போலும். ஆனால் இப்பொழுது அந்தப் பரீக்ஷையுத்த மும்முறத்தில் நின்றுபோயிருக்கிறது. அதெல்லாம் இருக்கட்டும். நான் கப்பலை விட்டு இறங்கினதுதான் தாமதம். தஞ்சை ஜில்லா கலெக்டர் உத்தியோகம் கைமேல் கிடைத்தது. நான் வேலையை ஒப்புக்கொண்டு இரண்டே வாரமாயிற்று. உங்களைத் தஞ்சைக் கழைத்துக்காண்டு செல்ல இங்கு வந்தேன் தந்தியோ "உதவிகாரிய தரிசி" (Under Secretary) வேலை என்று வந்திருக்கிறது. உடனே சென்னை வந்து சேரவேண்டுமாய்க் கண்டிருக்கிறது. ஆகவின் இன்று இரவில் 10-45-க்கு வரும் பட்டணம் மெயிலில் சென்னைமாநகருக்குச் செல்ல சித்தமா யிருங்கள்.

இராமச்சந்திரய்யரும் தங்கம்மாளும் பார்வதியம்மாளையு மாதரணை செய்து வைத்துக் கொண்டு பட்டணத்திலும், கும்பகோணத்திலுமாக உலகம் புகழ சுகமே காலங்கழித்தனர்.

---

## TRUTH OFTEN UNWELCOME AT FIRST.

The time is racked with birthpangs: every hour
Brings forth some gasping truth, and truth [new-born
Looks a mishappen and untimely growth
The terror of the house-hold and its shame
A monster coiling in its nurse's lap
That some would strangle, some would starve;
But still it breathes, and passed from hand to [hand,
And suckled at a hundred half-clad breasts
Comes slowly to its stature and its form
Calms the rough ridges of its dragon scales,
Changes to shining locks its snaky hair,
And moves transfigured into Angel guise,
Welcomed by all that cursed its hour of birth
And folded in the same encircling arms
That cast it like a serpent from their home.

—*Oliver Wendell Holmes.*

---

## உண்மை முதலில் ஒருவர்க்கும் பிடியாது.

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

1. மருவிய வயாவிற் கால மிடையற வருந்தா நிற்கும்,
ஒருவறக் கடிகை தோறு முதித்தலா லொவ்வோ ருண்மை;
தருமதி நிறையு முன்னந் தாய்வயிற் றுதித்த சேய்போல்,
உருவது குறைந்து தோன்று முதித்தவவ் வுண்மை மாதோ.

(இ-ள்.) ஒவ்வொரு நாழிகையும் யாதேனும் ஒருண்மை உலகில் தோன்றிக்கொண்டே யிருத்தலினாலே, அது தோன்றுதற்கிடனாகிய காலமென்னும நங்கைக்குப் பிரசவ வேதனை நீங்குவதேயில்லை. அவ்வுண்மையானது பிறக்கும்போது எவ்வாறு தோன்றுமென்னில், பத்துமாதமும் பூரத்தியாகிக் கருப்பம் பரிபூரணமாகு முன்னமே குறைமாதத்தில் பிறந்த குழந்தைபோல, மகா அவலட்சணமாகத் தோன்றுமேயன்றி, இனிமையாகத் தோன்றுவதில்லை.

2. தாய்மடிச் சுருண்டு தங்குஞ் சருப்பமொன் றதனை யேய்ப்பத்,
தீபவவ் வுருவங் கண்டு, சிந்தையி லயர்ந்து, மற்றீ
தேயநங் குலத்துக் கீன மிழைக்கவந் துற்ற தாய
மாயமொன்றென்ன வஞ்சி மாழ்குவர் மனத்து மாதோ.

(இ-ள்.) அன்றியும், ஒருவர்க்கு நல்லவடிவுடைய குழந்தை பிறத்தற்கு மாறாகச், சர்ப்பம்போலக் கோரரூபமொன்று பிறந்து தாயின் மடியிற் சுருண்டு கிடக்கக்காணின், அஞ்சி, உறவினர்யாரும், ஐயோ நம் குலத்துக்குத் தீராக்குறையும் அவமானமும் உண்டுபண்ண இந்தக்கோரம் ஏன்வந்து பிறந்ததென்று, மனம் வருந்துதல்போல, இவ்வுண்மையைக்கண்டு அஞ்சி வருந்துவார்கள்.

3. சிலரதைக் கழுத்து நையத் திருகுமினென்பர், சில்லோர்
குலைவுற வுணவிடாது கொல்லுமி னென்ப ரேனும்,
நலிவற வுயிர்த்து நின்று, நவில்பல கரத்து மாறி,
முலைபல செவிலியூட்ட முசிப்பற வளருமன்றே.

(இ-ள்.) சிலர் அதனைக்கழுத்தைத் திருகிக்கொன்று விடுங்கள் என்பார்கள். வேறு சிலர் ஆகாரம்போடாமல பட்டினி போட்டுக் கொல்லுங்கள் என்பார்கள். ஆயினும், அவ்வுண்மையென்னும் குழந்தையானது, வல்லுயிர் பெறுதலின், இத்தனைக்கும் மடியாமல், உயிர்பெற்றிருந்து, பல கை மாறி, அநேக செவிலித்தாய்களின் முலைப்பாலுண்டு, சிறிதும் தளர்ச்சியில்லாமல் வளர்ந்துவரும்.

4. வரவர வளர்ந்து மேனி வடிவுற நிறைந்த தாகி,
வெருவுறு முடல மெல்ல விளங்கிநல் லழகு தோன்ற,
மருவிய பாந்தண் மேனி மறைந்துநல் வனப்புவாய்ந்து,
திருமலி தெய்வ மென்னத் திகழ்ந்திடுஞ் சிறப்பி னன்றே.

(இ-ள்.) அவ்வாறு நாளுக்குநாள் வளர்ந்து, உருவத்திலும் வடிவத்திலும் நிறைவடைந்து, முன் கண்டோர் அஞ்சிய அருவெறுப்பான தேகமானது விளக்கமுற்று அழகுதோன்ற, முன்னிருந்த பாம்பைப் போன்ற கொடிய மேனியானது மாறிமறைந்து அழகு வாய்ந்து, தெய்வமேனிபெற்று, ஓர் அழகிய தெய்வம்போல விளங்காநிற்கும் அவ்வுண்மை.

5. மற்றநாட் பிறந்த காலை வைதறப் பழித்தோர் யாரும்,
முற்றிய மகிழ்ச்சி யோடு முனிவற வெதிர்கொண் டேகிப்,
பற்றரும் பாந்த ளென்னப் பயந்தெறிந் துதறுங் கையால்
உற்றுறத் தழுவி யோம்ப வுயருமவ் வுண்மை தானே.

(இ-ள்.) அப்போது, முன்தான் பிறந்த காலத்துத் தன்னை வைது நிந்தித்தோர் யாரும் மிகுந்த மகிழ்ச்சியோடும் எதிர்கொண்டழைத்து, முன்னம் பாம்பென்று நடுங்கித் தொட்டவுடனே எறிந் துதறிய கைகளால் உடல் புளகிக்கத்தழுவி உபசரிக்க, பெருஞ்சிறப்படையும் அந்த உண்மை.

---

## CHARACTER SKETCH: THE STORY OF PROSCOVIA.

## குணவலி விளக்கம்: ப்ராஸ்கோவியாவின் சரித்திரம்.

(21-வது பக்கத்தொடர்ச்சி)

இவ்வாறு ப்ராஸ்கோவியா கடவுளைப் பிரார்த்தித்து வருங்காலத்தில், அவளது தாயார் அபாயகரமான ஓர் வியாதியினால் பீடிக்கப்பட்டு நெடுநாள் பாயும் படுக்கையுமாய்க் கிடந்து வருந்த நேர்ந்தது. அப்போது ப்ராஸ்கோவியா அவருக்கு வேண்டிய பத்திய பாகங்களைச் செய்து கொடுத்து அன்போடு பாதுகாத்து வந்ததேயன்றிச், சமையல் சாப்பாடு முதலிய வீட்டுக்காரியங்களையும் குறைவு வராமல் செய்து நிர்வகித்து வந்தாள். அதனால், தந்தை தாயாருக்கு அவளிடத்தில் கௌரவமும்நம்பிக்கையும் உண்டாகி அவளைக் கேவலம் இனந்தெரியாத குழந்தைபோலப் பாவித்தலைவிட்டுப் பாரபுத்திவந்தவளாகப் பாவிக்க வேண்டியதாயிற்று. ஆதலால், இதன்பின் அவள் பீடர்புரிக்குப் போகும் விஷயத்தைப் பிரஸ்தாபிக்க வந்தபோது முன்போல அலக்ஷியம் பண்ணி அவளை வாயெடுக்க வொட்டாமல் கண்டிப்பதைவிட்டு, அவள் தந்தை, "அம்மா நீ எங்களை இந்த வயது காலத்தில் ஆதாரமின்றித் தனியே விட்டு விட்டு மிகவும் அபாயகரமான தொலைதூரப் பிரயாணத்தைத் தனியே செய்ய உத்தேசித்தல் உனக்குத் தருமமாகுமா?" என்று அவளை நயந்து வேண்டத் தலைப்பட்டனர். அவள் அவர் வார்த்தையைக்கேட்டு மனம் வருந்திக் கண்ணீர் விட்டாளாயினும் தான் கொண்ட எண்ணத்தைமட்டும் கைவிடத் துணியவில்லை.

பின்பு, தெய்வம் வரம்கொடுத்தும் பூசாரி வரம்கொடுக்க வில்லை யென்பது போல இவளுடைய தந்தை தயார் ஒருவாறு இவள் கருத்துக் கிணங்கின போதிலும் இன்னொரு விகாதம் எதிர்ப்பட்டது. இவள் துரைத்தனத்தாரின் அநுமதியில்லாமல் அவ்வூரைவிட்டு வெளியேபோக ஒப்பமாட்டார்கள். ஆதலின் அவ்வநுமதியை அவசியம் பெற்றுக்கொள்ளவேண்டியதாயிற்று. அது எப்படி முடியும்? இவள் தகப்பனார் அதுவரையில் அதிகாரிகளுக்கு

எழுதிக்கொண்ட அநேக விண்ணப்பங்களில் ஒன்றேனும் கவனிக்கப்படவேயில்லை. இப்போது அநுமதிப் பத்திரத்துக்காக அவர் எழுதிக்கொண்டால் அதை யார் கவனிக்கப் போகிறார்கள்? ஆதலினாலே, ப்ராஸ்கோவியா தான் நேராகவே துரைத்தனத்தாருக்கு மநுச் செய்துகொள்ள நிச்சயித்து அவ்வூரில் ஒருவரால் முறைப்படி ஒரு விண்ணப்பம் எழுதிக் கொடுக்கச்சொல்லி அதனை சிபேரியா கவர்னருக்கு அனுப்பினாள்.

ருஷியா துரைத்தனம் நமது பூர்விக கர்நாடக துரைத்தனத்துக்கு ஒருவிதத்திலும் பின்னடையாதென்றே சொல்லவேண்டும். மநு எழுதிக்கொண்ட ஆறுமாதத்துக்கெல்லாம் தெய்வாதீனமாகப் பிராஸ்கோவியாவுக்கு அநுகூலமாகவே உத்தரவு கிடைத்தது. அவளது பிதாவுக்குத் தண்டனையேயன்றி அவளுக்கு யாதொரு தண்டனையுமில்லை யாதலின் அவளுக்கிஷ்டமானபடி எப்போது வேண்டுமானாலும் சிபேரியாவை விட்டுப் போகலாமென்று அநுமதிப்பத்திரம் வந்தது. ஆயினும் இன்னமும் அவள் மனோரதம் நிறைவேறுதற்குக் காலம் வரவில்லை. "அடுத்து முயன்றாலும் ஆகுநாளன்றி எடுத்த கருமங்களாகா" என்னும் மூதுரை பொய்யாகுமா. ஆதலால் அவள் பிதா, வந்த அந்த பத்திரத்தைத் தாம் வாங்கி அவளுக்குக் கொடாமல் பெட்டியில் வைத்துப் பூட்டிவிட்டு, "உத்தரவு வாராதென்கிற நம்பிக்கையினால் மநுச்செய்ய ஒப்புக்கொண்டேனேயன்றிப் பதினெட்டு வயதுப் பெண்பிள்ளையை நெடுந்தூரப்பிரயாணம் தானே செல்லும்படி மனமொப்பி யனுப்புவேனா? பிராணன் போனாலும் மாட்டேன்." என்று ஒரேபிடியாய்ச் சொல்லிவிட்டார்.

'விடாமுண்டன் கொடாமுண்டன்' கதைபோல ப்ராஸ்கோவியாவும் தான் பிடித்த பிடியை விடவில்லை. அவள் படும் துயரத்தைக் கண்டு தாயார் பரிதபித்து "அம்மா உன்பிதா சம்மதிக்கும்பக்ஷத்தில் நான ஒன்றும் தடை சொல்லவில்லை; சுகமாய்ப் போய்வா" என்று கூறினர். பிதாவும் கடைசியில் சம்மதித்தனர். "நாம் இப்பெண்ணை இங்கு வைத்திருத்தலிற் பயனில்லை. இவள் மனசுக்கு விரோதமாய் இவளுக்கு வருத்தம் உண்டுபண்ணுதலையன்றி வேறு நன்மையைக் காணோம். ஆதலின் இவள் மனம்போனபடி விட்டுவிடவேண்டியதுதான்" என்று சொல்லிப் பின்னும் அவளை நோக்கி, "பேதைப்பெண்ணே, இவ்விடத்தில் உன் தகப்பனோடு சுதந்தரமாகப் பேசுதல்போலச் சக்கிரவர்த்தியோடும் பேசலாமென்றெண்ணுகின்றாயோ? அங்கே அரண்மனையில் எத்தனைகட்டு! எத்தனைகாவல், வாயிலிக்கு வாயில் யமகிங்கரர் போலப் பாராச்சேவகர்கள் இருப்பார்களே. வாசற்படி தாண்டவும் உன்னால் முடியாதே. பிச்சையெடுத்துப் பிழைப்பவர்போல அவ்வளவு எளிமையோடு, தக்க உடையுமில்லாமல், சிபார்சுமில்லாமல், நீ யெவ்வாறு சக்கிரவர்த்தியைப் பரர்க்கப் போகிறாய்? யாவர் உன்னை ராஜசன்னிதானத்துக்குக் கூட்டிக்கொண்டு போகக் கௌரவம் பாவியாமல் உடன்படுவார்கள்?" என்று கூறினர். ஆயினும் ப்ராஸ்கோவியாவுக்குச் சற்றும் அதைரியமுண்டாகவில்லை. தனக்கு அநுமதிப்பத்திரத்தைக் கிடைக்கச் செய்தருளிய இறைவன் மற்ற இடையூறுகளையும் நீக்கித் தன் மனோரதத்தை நிறைவேற்றுவிப்பர் என்னும் நம்பிக்கை அவள் மனத்திற் குடிகொண்டிருந்தது. தான் தஞ்சமென்றிக் கடவுளின் ஆற்றலில் வைத்த கரைகடந்த நம்பிக்கையும் தன்னுடைய அதிதீவிர எண்ணமும் மலைபோன்ற இடையூறுகளையெல்லாம் அணுமாத்திரமாகத் தோற்றுவித்தன. ஆதலின தான்மேற்கொண்டகாரியம் நிஷ்பலமாய்ப் போகுமோ என்கிற சந்தேகமும் சஞ்சலமும் அவளுக்கு இல்லவேயில்லை. அக்காரியம் தன் தாய் தந்தையரின் இஷ்டத்துக்கு விரோதமில்லாமல் அவர் சம்மதத்தோடு தொடங்கிச் செய்யவேண்டுமென்பதொன்றே யொழிய வேறே சஞ்சலம் அவளுக்கு இல்லை. நல்ல வேளையாய்

அச்சம்மதியும் கிடைத்து விட்டது. பிரயாணம் புறப்படும் தினமும் நிர்ணயிக்கப்பட்டது.

குறித்த தினத்தில் அதிகாலையில் எழுந்து உடை உடுத்திக்கொண்டு தோளில் சஞ்சியொன்று கட்டித் தொங்கவிட்டுக்கொண்டு பிரயாணத்துக்குச் சித்தமாயினாள். வழிச்செலவுக்குப் பணம் எவ்வளவிருந்தது தெரியுமா? வீட்டில் இருந்த ஆஸ்தியெல்லாமாய்ச்சேர்ந்தது ஒரு ரூபாயுக்கு மேலில்லை. அது பீடர்புரிக்குப்போகப் போதுமா? வீட்டில் இருந்தாலும் சமயத்துக்கு உதவுமென்று அவள் கூறின போதிலும், அவள் பிதா ஒப்பவில்லை. ஆதலால் பிதாவின் கட்டளையை மீறுதற்கஞ்சி அதையெடுத்துக்கொண்டாள். அவர்களைப் போலவே தண்டனைப்பட்டு வந்திருந்தவர்களில் மிக எளியராகிய இருவர்கள் தங்களிடத்தில் உள்ள நான்கு அணாச் சில்லரையையும் கொண்டுவந்து கொடுத்தார்கள். அதைப் பெற்றுக்கொள்ள அவள் உடன்படாவிடினும், அவரது பிரீதிக்குச் சந்தோஷித்துத் தான் பெறும் நன்மையை அவர்களும் அடையும்படி சக்கிரவர்த்தியிடத்தில் அவர்களுக்காகவும் மநுச்செய்வதாக வாக்குத்தத்தம் செய்தாள். பின்பு உருஷியர்களுள் உள்ள பழையதோர் இனியவழக்கப்படி பிரயாணம் போவார்களின் பொருட்டுச் செய்யும் பிரார்த்தனையைச் செய்து, அதன்பின் ஒருவர்க்கொருவர் பிரிந்துபோகையில் சொல்லிக்கொள்ளும் வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு பிராஸ்கோவியா தந்தை தாயாரை நமஸ்கரித்து அவர்களின் ஆசீர்வாதத்தைப் பெற்றுக்கொண்டு பிரயாணமானாள். பதினெட்டு வயதுப் பெண்பிள்ளை வழிச்செலவுக்கு ஒரு ரூபாயுடன் கரைகடந்த காட்டுமார்க்கமாய்க் கால்நடையாக நடந்துசென்று சக்கிரவர்த்தியின் தரிசனம் பெறும்படிப் புறப்பட்டனள்!

இவ்வாறு ப்ராஸ்கோவியா 'திக்கற்றவர்களுக்குத் தெய்வமே துணை' யென்றபடி தெய்வத்தையே துணையாக நம்பிப்புறப்பட்டுச் செல்லுகையில், அந்நெடுந்தூரப்பிரயாணத்தில் அவளுக்கு அநேக இடுக்கண்களுண்டாயின. ஒரு தடவை ஊரைவிட்டுப் புறப்பட்டுச் செல்லுகையில் வழிதப்பிப்போய் நெடுநேரம் சுற்றித் திரிந்து கடைசியில் புறப்பட்ட ஊருக்கே மீண்டும் வந்துசேர்ந்தனள். மற்றொரு தடவையில் தான்செல்லும் மார்க்கத்தில் சமீபமுள்ள ஊர்களொன்றையும் அறியாளாதலின் அங்கு எதிர்ப்பட்டவர்களை நோக்கி 'ஐயா பீடர்புரிக்கு வழி எப்படி' யென்று கேட்க அவர்கள் குலுங்க நகைத்து இந்த மூன்று பாதைகளில் எந்தப் பாதைவழியே சென்றாலும் பீடர்புரிக்கோ ரோமபுரிக்கோ பாரிஸ்புரிக்கோ எங்கு வேண்டுமானாலும் செல்லலாம் என்றார்கள். நல்லவேளையாய் அவள் சென்ற பாதை சரியானபாதையாயிருந்தது. குக்கிராமங்களில் ஜனங்கள்பெரும்பாலும் அவளிடத்தில் இரக்கங்கொண்டு உணவு முதலியவற்றைக்கொடுத்து உபசரிப்பார்கள். பெரிய ஊர்களில்தான் அவளுக்கு அங்கங்கு சில கஷ்டங்கள் நேரிட்டன. ஒரு தடவை ஒரூருக்கு நாலைந்து மைலுக்கிப்பால் செல்லும்போது சந்தியாகாலத்தில் சடிதியில் காற்றும் மழையும் குமுறிக்கொண்டு வந்துவிட்டது. சண்டமாருதத்தால் மரங்கள் வேர்ப்பறியலாய்ப் பறிந்து வீழ்ந்தன. ப்ராஸ்கோவியாவின்மேல் மரம் முறிந்துவிழ ஒரு மயிரிடை தப்பியது. அதனால் அவள் முன்னோக்கிப்போக அஞ்சி அங்கு ஒரு புதரில்போய் ஒதுங்க அது சிறிது நேரம் மழைக்குத் தாங்கலாயிருந்ததேயன்றி அப்பெரு மழைக்கு அச்சிறு புதர் ஓர் ஆகாரமாகுமா? கிளைகளினூடே மழை தாரைதாரையாகச் சொரிந்து அவளை முற்றிலும் நனைத்து விட்டது. மழையோயுமுன் சூரியாஸ்தமனமாகி இருள் மூடிக்கொண்டதனால் பாவம் அம்மடந்தை அவ்விடத்திலேயே குளிரிலும் காற்றிலும் விறைக்க விறைக்க நனைந்த துணியோடு இராப்பொழுது முழுதும் கழிக்கவேண்டியதாயிற்று.

பொழுது விடிந்ததும் மெல்ல மெல்ல நகர்ந்து பாட்டையில் வந்துட்கார்ந்திருக்க அவ்வழியே வண்டியோட்டிச்சென்ற குடியானவன் ஒருவன் இரக்கங்கொண்டு அவளை மறுகிராமத்துக்கு வண்டியிலேற்றிச் சென்றான், வண்டியை விட்டு இறங்கும்போது, பாவம் அவள் தவறிக்கீழே விழுந்து விட்டமையால், உடுப்பு முழுதும் சேறும்சகதியுமாய்ப் போய்விட்டது. பசியும்தாகமும் ஒட்டிக்கொள்ள மெல்லமெல்ல நடந்து களைத்துப்போய் ஒரு தெருத்திண்ணையில் உட்காரப் போனதும் அவ்வீட்டுப் பாக்கியசாலி கொடிய பாம்புபோலச் சீறிவந்து, வேட்டைநாய்போல மேலேவிழுந்து, "போ போ இங்கு நில்லாதே ஊர்வழிபோகிற வறண்டற் பிணங்களுக் கெல்லாம் இதுதானா இடம்" என்று வாயில் வந்தபடி திட்டித் துரத்திவிட்டாள். பின்பு மற்றவீடுகளிலும் அவ்வாறே கிட்டவொட்டாமல் வெருட்டித் துரத்திவிட அவள் கடைசியில் ஊருக்குப் புறத்துள்ள ஆலயத்திற் சென்றிருக்கலாமென்று போக அங்கு கோயில் வாயில் அடைக்கப்பட்டிருந்தமையால் வாயிற்படியில் உட்கார்ந்தாள். இதற்குள்ளாக அவ்வூர்ப் பிள்ளைகளெல்லாம் கும்பலாய்க் கூடிவந்து நொந்த மாட்டைக் கொத்தும் காக்கைகள்போல அவளைச் சூழ்ந்து கொண்டு அவளைக் கள்ளியென்றும் கானக்குறத்தி யென்றும் பலவிதமாகத்திட்டி உபத்திரவிக்கத் தலைப்பட்டார்கள். ஐயோ! அவளுடைய அவஸ்தையை என்னென்று சொல்லுவது. பசியாலும் களைப்பாற உட்காருவோமென்றால் அதற்கு மொட்டாமல் இத்துஷ்டப் பயல்கள் வருத்தவும் இரண்டு மணிநேரம் இருந்து உள்ளுக்குள்ளே பகவானைத் தியானித்து, "சுவாமீ, தீனதயாபரா, எளியேனுக் கிக்கொடிய துன்பத்தைப் பொறுத்திருக்கப் போதுமான பலத்தைக் கொடுத்தருளவேண்டும்" என்று பிரார்த்தித்துக் கொண்டிருந்தாள்.

அப்போது கருணாநிதியாகிய கடவுளின் அருவருளே உருவுகொண்டதுபோல ஒரு மாதுசிரோமணி அக்கூட்டத்தை விலக்கிக் கொண்டு அவளண்டையில் வந்து, "அம்மா! வருந்தாதே, நீ யாவள்? இங்கு வரக்காரணமென்ன?" என்று கேட்கப் பிராஸ்கோவியாவும் மழைமுகம் கண்ட பயிர்போல வாட்டம் நீங்கித் தன் வரலாற்றைக் கூறினாள். அப்போது கிராமாதிகாரியும் அங்குவந்து அவளுக்குக் கொடுக்கப்பட்டிருந்த அநுமதிப் பத்திரத்தைப் பார்வையிட்டு அதனால் அவள் அந்தஸ்து முதலியவை அவள் சொல்லிய தற்கிணங்க விருக்கக் கண்டனன். பின்பு அந்தக் கருணையுள்ள அம்மணி அவளைத் தன்வீட்டுக்கு அழைத்துப்போக எழுந்திருக்கச்சொல்ல ஐயோ பாவம்! அவள் கால்கள் குளிரால் விறைத்துப் போய் நீட்டமடக்கச் சுவாதீனமில்லாமல் இருந்ததன்றி ஒருகாற செருப்பு எங்கோ நழுவி விழுந்துபோய் கால்களிரண்டும் வீக்கம் கொண்டிருந்தன. அந்தப் பயங்கரமான இராத்திரியில் மழையாலும் குளிராலும் அடிபட்டு அவளுக்குண்டான தேகஜாட்டியம் பின்பு மரணபரியந்தம் முற்றும் நீங்கினதேயில்லை. அவ்வூரார் அவளிடத்திற் காட்டிய தயையின்மைக்காக மிகவும் பச்சாத்தாபப் பட்டுப் பின்பு அவளுக்கு வேண்டிய உதவிகளைச் செய்தார்கள்.

அங்கு சிலநாள் தங்கியிருந்து பின்பு தனக்கு உடம்பு அநுகூலப்பட்டு நடக்கச் சத்துவமுண்டானதும் ப்ராஸ்கோவியா அவ்வூரை விட்டுப் புறப்பட்டுத் தன்வழியே சென்றாள். வழியில் அங்கங்கே இளைப்பாறுவதற்காகவேனும் உடம்பை சுவஸ்தப்படுத்திக் கொள்ளுதற்கேனும் இரண்டொரு பகல் தங்கியிருப்பாள். தான் தங்கின வீட்டில் அவ்வீட்டாருக்குதவியாகப் பெருக்கல் மெழுகல் பாத்திரம் பூசுதல் தைத்தல் முதலிய சில்லரைக் காரியங்களைச் செய்து கொடுப்பாள். அவள் ஓரிடத்துக்குப் போனால் தன் விருத்தாந்தங்களை உடனே சொல்லிக் கொள்வதில் பயனில்லை யென்று கண்டாள். தான் இன்னா

ளென்றும் இன்ன காரியமாகப் போவதாயும் உண்மையைச் சொன்னால் கேட்டபேர்கள் நம்புவதில்லை. ஏதோ தங்களை ஏமாற்றிக் காசுபறிக்க எண்ணங் கொண்ட கிருத்திரமக் காரியாகக் கருதுவார்கள். ஆதலால் ஒரு வீட்டுக்குச் சென்றதும் மெல்லப், பசிக்கு இத்தனை சாதம் வேண்டுமென்று கேட்பாள். அவ்வீட்டார் தயவாக ஏதாவது கொடுக்க இஷ்டப்பட்டால் பின்பு வழி நடந்து மிகவும் களைத்துப் போயிருக்கிறேன். சற்றுப்படுத்துறங்க இடம் தரவேண்டுமென்று கேட்பாள். அதற்கும் அவர்கள் ஒப்பி இடம் கொடுத்தால் பின்பு அவர்களிடத்தில் தன் வரலாற்றைச் சொல்லுவாள். சில ஊர்களில் தான் என்ன சொல்லியும் தனக்கொருவரும் உபகரியாமல் போனால், கிராமாதிகாரியிடம் சென்று தன் வாலாற்றைச் சொல்லித் தன் அனுமதிப் பத்திரத்தையும் காண்பிப்பாள். அதைப்பார்த்து அவளுடைய அந்தஸ்தைத் தெரிந்துகொண்டு வேண்டிய உதவிகளைச் செய்வார்கள். அவளுக்குச் சிற்சில இடங்களில் மேலே கூறியபடிச் சில கஷ்டங்கள் சம்பவித்தபோதிலும் பெரும்பாலும் ஜனங்கள் அவளை ஆதரவாகவே உபசரித்து வேண்டிய உதவிகளைச் செய்வார்கள்.

(இன்னும் வரும்.)





## EDUCATION IS WEALTH.

## வித்தையே பெரியதனம்.

வித்தையின் குணங்களைக்கேள்:

அது கற்பிக்கிறவனுக்கும் சரி, கற்கிறவனுக்கும் சரி, மேன்மை புரிகிறது.

நீங்கள் யாதாயினும் ஒரு வஸ்துவைப் பிறருக்குக் கொடுத்துவிடும் பட்சத்தில் அது உங்களுக் கில்லாமற்போகின்றதல்லவா? ஆனால் வித்தை அப்படிக்கல்ல. அதன் மகத்துவம் என்னவென்றால், வித்வான் தான் அதை இழக்காமலே பூர்த்தியாய்க் கொடுத்து விடலாம். மற்றொருவன் அதை கிரகிக்கவும் செய்யலாம். வெள்ளி தங்கத்தை இடைவிடாமல் கொடுத்துக் கொண்டிருந்தால் அது குறைகிறது. ஆனால் வித்தையோ பிறருக்குக் கொடுபடுவதினால் தினந்தோறும் விர்த்தியாகு மேயல்லாமல் குறையவேமாட்டாது. திரவியம் போகிறமாதிரி வித்தை ஒருவிதத்திலும் போகாது, செலவாகாது, திருட்டுப்போகாது நல்ல ஆலோசனைகர்த்தா மாதிரி, தமக்கு வரப்போகிற அபாயங்களை முன்னதாகவே தெரிவித்து அவைகளின் பலன்களை காண்பிக்கிறது. கிரகசாரத்தினால் ஒருவேளை நமக்கு தொந்திரவு வந்தால் அப்போது வித்தை நல்ல ஆலோசனை சொல்லுகிறது. ஜனங்களுக்கு வித்தையே தோழனாகவும் பிராண சிநேகிதனாகவு மிருக்கிறது.

இருட்டில் தீவட்டி எப்படி வெளிச்சம் தருமோ அப்படி வித்தை ஜனங்கள் மத்தியில் பிரகாசிக்கிறது. மேலும் ஒரு தீபத்தில் மற்றொன்றை ஏற்றினால் முதல் தீபம் எப்படி அணையாதோ அப்படியே வித்தை சொல்வதனால் மூடனாகிற குருடனுக்கு மூடத்தனமாகிற இருட்டு போய்விடுகிறதேயொழிய சொல்பவனுக்கு குறைவுண்டாகிறதில்லை.

ஆகையினால் வித்தையென்கிற தனமுள்ளவன் தன் அஜாக்கிரதையினால் அதைப் போக்கடித்துக் கொள்ளவும்கூடாது. தன்சக்தியளவு பிறருக்கு அதைக் கற்பிக்க அசம்மதமாயிருக்கவும் கூடாது.

## HISTORICAL COLUMN: THE THIRD BATTLE OF PANIPAT.

## சரித்திர விலாசம் : பானிப்பட்டில் மூன்றும் முறை யுத்தம்.

(25-வது பக்கத்தொடர்ச்சி).

அது கண்டு மகாராஷ்டிரர் இவ்வப்கானிய சத்துருக்களை அடித்துத் துரத்திவிட்டு இந்து தேசமுழுதும் தமது ஆளுகையிற் சேர்க்கத்துணிந்து அதற்கு வேண்டுமான பெருமுயற்சியைச்செய்தனர். பெரியதோர் மகாசைனியத்தைச் சேகரித்து அதனை, அதன் முன் நிஜாமோடு யுத்தம்புரிந்து வெற்றிகொண்டு அநேக தேசங்களை வசப்படுத்தி மகாவீர பராக்கிரமனென்று பெயர்பெற்றவனாகிய சதாசிவராவ் அல்லது 'பாவா' என்பவனைத் தளகர்த்தனாக நியமித்தனுப்பினர். இவனைத் தவிர அச்சேனையில் சேனா நாயகராகப் பீஷ்வாவின் ஜேஷ்டபுத்திரனாகியவிசுவாசராவும், பின்நடக்கும் போரில் புகழும் கொள்ளையும் பெறலாமென்னும் ஆவலோடு முக்கியமான மஹாராஷ்டிரத் தலைவர் அனைவரும் கூடியிருந்தனர். இராஜபுத்திரர்களும் ஒருபகுதி சேனையைத்துணையாக அனுப்பியிருந்தனர். ஜாட்டுகுலத் தலைவரின் தலைவனாகிய சுராஜ்மல் என்பவன் தனது பரிவாரங்களோடு படைத்துணையாக வந்திருந்தனன். இவன் பாவாவுக்கு, காலாட்படையையும் பீரங்கிப்படையையும் பின்னிருத்திவிட்டுக் குதிரைப்படையோடு மஹாராஷ்டிரருடைய பூர்வீக வழக்கப்படி பகைவரைப்பொருது போராடும்படிப் புத்திசொல்லியும், அப்பிராம்ஹண வீரன், தனது கொடிய பீரங்கிப்படையாலும், பிராஞ்சுக்காரர் இராணுவத்தில் அமர்ந்திருந்து யுத்தகௌசலங்கள் கற்றோனாகிய இப்பிரகீம்கானென்னும் தளகர்த்தனால் நடத்தப்பட்ட தனது ஆயுத சிலர்களாகிப் பழகித்தேர்ந்த ஒன்பதினாயிரம் போர்வீரரடங்கிய கனத்த காலாட்படையாலும் செருக்குற்று அப்புத்திமதியைக் கொள்ளாமல் இகழ்ந்து தள்ளிவிட்டனன். சின்னாளைக்கு இப்பெரியமஹாராஷ்டிர சைனியம் ஒருவாறு வெற்றியையே பெற்று வந்தது. டில்லி நகரத்தைப்பிடித்து அங்குள்ள அரண்மனைகளையும் ஆலயங்களையும் கொள்ளைகொண்டு, அம்மகோன்னத தலைசயில் மஹாராஷ்டிரர் விசுவாசராவை இந்தியா சக்கிரவர்த்தியாக ஏற்படுத்தவும் எண்ணம் கொண்டனர். சக்கிரவர்த்தியின் சிங்காதனத்தைக் கவர்ந்துகொண்டு, ஆஸ்தானமண்டபத்தின் வெள்ளிவேய்ந்த முகட்டைப் பெயர்த்தெடுத்து அதனைப் பதினேழு லக்ஷம் ரூபாயாக உருக்கி அடித்துக்கொண்டனர். இது தவிர யமுனை நதிக்கரையில் அகமத்ஷாவானவன் அந்நதியைக் கடக்குமுன்னமே, காஞ்சிபுரம்என்னும்கோட்டையைப் பிடித்துக் காவல் வீரரைக்கொன்று இன்னொரு வெற்றியும் மஹாராஷ்டிரர் பெற்றனர். ஆயினும் மகமதீய சேனைகள் அயோத்தியா நபாபாகிய சூஜா அதௌலாவின்படைத்துணையைப்பெற்று யமுனையாற்றைக் கடந்த பின்பு அதுகாறும் மஹாராஷ்டிரர் முகமாகச் சென்ற ஜயப்பெருக்கம் கதிமாறி மஹமதியர் முகமாகச்செல்லவாரம்பித்தது. மஹாராஷ்டிரர் அகமத்ஷாவுக்குப் பின்னடைந்து பானிப்பட்டையடைந்து அங்கு அகழும் அரணும் ஏற்படுத்தித் தம்தளங்களைப்பலப்படுத்திக்கொண்டனர். அகமத்ஷா தன்னிலும் தொகையிலும் பீரங்கிப்படைவலியிலும் உயர்ந்த பகைவரை அவர்களது அரணுட் புகுந்து தாக்கத்துணிவில்லாமல் சமீபத்தே பாளையமிறங்கித் தன் படையையும் அரணாற் பலப்படுத்திக்கொண்டனன். இரண்டுமாதம்வரையில் இருதிறத்தாருக்கும் அடிக்கடி சிறுபோர்கள் நடந்து பரஸ்பரம் ஆகாரமுதலானசாமான்களை எதிரிபெறாமல் தடுத்து நீக்க முயன்று வந்தனர். மகமதீயர்களுக்கு ஆகார பதார்த்தங்களில்லாமல் வெகு சங்கடமாயிருந்தது. அதனால் அகமத்ஷாவை அவன் பரிசனர் முடிவாகச் சண்டை செய்யும்படி வேண்டிக்கொண்டும் அவன் தன் சேனையின் தொகையிலும் மிகுந்த மஹாராஷ்டி

ர்சேனையானது இன்னம் அதிக சங்கடங்களை அனுபவிக்க வேண்டியிருக்குமென்றுணர்ந்து அவ்வாறு செய்தற்குடன்படவில்லை. கடைசியில், மஹாராஷ்டிரர் இனிமேல் சமாளிக்க முடியாதென்னும்நிலைமைக்கு வந்ததனால் தங்களைப் பசியாற் கொன்று முடித்தலைக்காட்டிலும் போருக்குச் செலுத்துதல் முறைமையாகும் என்று வேண்டிக்கொண்ட வேண்டுகோளால் பாவா இணங்கினான்.

இவ்வாறு மஹாராஷ்டிரர் யுத்தத்துக்குச் சன்னத்தமாதலை அகமத்ஷா கேள்வியுற்றதும் தானும் தன் சேனைகளைப் பாளையத்தைவிட்டப்புறம் பெயர்த்து வெளி நிலத்தில் போருக்குச் சன்னத்தப்படுத்தினான். இந்த யுத்தமானது, யாம் அதன் சரித்திரசம்பந்தமான பிராதான்யத்தை ஆராய்வோமாயினும், அல்லது அதில் கைகலந்த படைகளின் தொகையை ஆராய்வோமாயினும் இப்பரத பூமியில் நடந்துள்ள மகாயுத்தங்களில் ஒன்றென்று கூறுதற்கையமில்லை. மகமதீய்சேனையில் 41,800-குதிரைவீரரும் 38,000-பதாதிகளும் 70-பெரும் பீரங்கிகளும் இருந்தனவாகவும், மகாராஷ்டிரசேனையில் 55,000-துரகங்களும், 15,000- காலாட்களும் 200-பெரும் பீரங்கிகளும் இவை தவிர இன்னம் பிரதான சேனையோடு கலவாத அளவற்ற பிந்தாரிகள் முதலான படைகளும் இருந்தனவாகவும் சொல்லப்படுகின்றது. மஹாராஷ்டிரர்கள் முடியிற் பாகையை நெகிழ்த்துவிட்டு முகத்தில் மஞ்சள் பூசி ஜயங்கொள்ளும் தைரியத்தை முழுதும் கைவிட்டுத் தமது பிராணனை நிச்சயமாக இழக்கவந்தவர்போல வந்தார்கள். ஆயினும் சண்டையின முடிவு நெடுநேரம் சந்தேகமாகவே யிருந்தது. இப்ரகிம்கான் என்பவன் தனது தேர்ந்துசிறந்த பதாதியோடு அப்கானியர் மத்தியிடத்துட் புகுந்து பல்லாயிரம ரோஹிலரைக்கொன்றனன். ஆனல் அகமத்ஷா தன்படையின் பின்புறத்திலிருந்து சேனையை வெகு சாமர்த்தியமாகச் செலுத்தி மஹாராஷ்டிரர் மத்தியைக் குதிரைப்படைகொண்டு தாக்கியடிக்கும்படித் தன் மந்திரிக்கு உத்தரவிட்டனன். நெடுநேரம் விடேன் தொடேனென்று போராடிய போராட்டத்தில் அப்கானியர் இந்துக்களிலும் அதிக தேகபலமுடையோராதலின் அவர்களுக்கு இவர்கள் ஆற்ற மாட்டாமற்போனார்கள். அபரான்னத்தில் இரண்டுமணி சமயத்தில் விசுவாசராயன் காயம்பட்டு ஆவியிழந்தனன். பாவா இவ்விபத்தைக் கண்டு ஹொல்காருக்குத் தான் முன்நியமித்தபடி செய்யச் செய்தியனுப்பிவிட்டு வேகமாகச்செல்லும் ஒரு குதிரையிலேறி யுத்தகளத்தை விட்டு நீங்கி மறைந்தனன். இச்செய்தியைப் பெற்றமாத்திரத்தில் ஹொல்கார் யுத்தரங்கத்தைவிட்டு நீங்க மற்ற மஹாராஷ்டிரத் தலைவரும் தத்தம் சேனைகளோடு நீங்கிவிட்டனர். அவ்வளவு பெரியசேனை முறிந்தோடத்தலைப்பட்டதும் ஒன்றுக்கொன்று திக்குத்திசை தெரியாமல் குழம்பிப்போய் ஆயிரக்கணக்காகப் பகைவர் வாளுக்கிரையாய் மடிந்தார்கள். பகைவர்கையில் அகப்படாமல் தப்பிக்கொண்டவர்களில் அநேகர் குடிகளால் கொல்லப்பட்டார்கள். ஓடி யொளித்தவர்களில் புருஷர், பெண்கள், பிள்ளைகளடங்கிய பல்லாயிரம் ஜனங்கள் பானிப்பட்டு நகரில் அடைத்து வைக்கப்பட்டு மறுநாட்காலையில் புருடாகள் கோரமாகக் கொல்லப்பட்டனர். ஸ்திரீ ஜனங்களும் பிள்ளைகளும் அடிமைகளாகக்கொண்டு போகப்பட்டனர். எலலாமாய் இக்கொடிய போரில் மாண்டவர்கள இரண்டு லக்ஷத்துக்குக் குறைவில்லையென்று கணக்கிடப்பட்டிருக்கிறது. தமது குடுமபத்தில யாராவது சிலரை யிழக்காதவர் மஹாராஷ்டிர ராஜ்யத்தில் ஒரு குடும்பமாவது இல்லை.

பீஷ்வாவுக்கு இச்செய்தி கொணர்ந்தபோது அவன் நர்மதாநதி தீரத்தில் இருந்தனன். "இரண்டு முத்துக்கள் கரைந்து போயின; இருபத்தேழு தங்க மோகராக்கள் இழக்கப்பட்டன, வெள்ளியிலும் செம்பிலும் மொத்தம் இவ்வளவென்றெண்ணமுடியாது" என்று

அவனுக்கெழுதிய கடிதத்தில் எழுதப்பட்டிருந்தது. இதனால் அவன் விசுவாசராயனும் பாவாவும் இறந்தனரென்றும் மஹாராஷ்டிர சேனைகள் முழுதும் மடிந்தனவென்றும் தெரிந்துகொண்டனன். இச்சோகத்தினின்றும் பீஷ்வா தேறித்தெளியாமல் புனா நகருக்குத் திரும்பி வந்ததும் அதிசீக்கிரத்திற்றானே இறந்துபோயினன்.

அஹமத்ஷாவுக்குத் தானடைந்த வெற்றியைக்கொண்டு இந்தியாவில் தன் ராஜ்யத்தை ஸ்தாபிக்க எண்ணமுண்டாகவில்லை. டில்லி ராஜ்யத்துக்கு அதிபதியாக ஷாஆலம் என்பவனை அரசனாக ஏற்படுத்திவிட்டுத் தான் தன் தேசத்துக்கு மீண்டனன். இந்த யுத்தத்தின் முக்கியமான விளைவு யாதென்னில இத்தோல்வி மஹாராஷ்டிரரது செல்வத்தையும் சீரையும் அடியோடே அழித்து அவர்கள் இத்தேயத்தில முதன்மையாக ஆளலா மென்னும எண்ணத்தை முற்றிலும குலைத்துவிட்டது தான். ஒருவர் பினனொருவராக மூன்றுபேர் பீஷ்வாக்கள மகா வல்லபமுள்ளவராயிருத்தலின் அவர் ஆளுகையின் கீழ் மஹாராஷ்டிரர் படிப்படியாக இந்தியாவில் முதன்மையான அதிகாரத்தையும உயர் நிலைமையையும் பெற்றனர். காலக்கிரமத்தில் மொகலாயருக்குப் பின் தாங்கள் அவர் பதவியை அடைந்திருப்பார்கள். பீஷ்வாவின் ஸ்தானத்திற் பெறப்பட்ட கௌரவமும் அதிகாரமும் நோக்கின மஹாராஷ்டிர ஜாதியார் முழுதும் பாலாஜி விசுவநாதின் சந்ததியாருக்குள்ளடக்கி அவரது ஆளுகையில் அமைந்து நிற்பாரென்றும் தோற்றியது. ஆயினும் இப்பானிப்பட்டு யுத்தத்தால் இந்த எண்ண மொன்றும் பலியாமல் போயவிட்டது. மஹாராஷ்டிரர் இந்தத் தோல்வியினின்றும் ஒருவாறு தெளிந்து தலையெடுத்தனராயினும் அவருடைய மகோன்னததசை போயே போய்விட்டது. பீஷ்வாக்களின் அதிகாரம் மிகவும் நெகிழ்ந்துபோய் மஹாராஷ்டிர ஜாதியார் எல்லோரையும் ஒன்றாக கட்டிப் பிடிக்கும்படியான சக்தியில்லாமற் போய்விட்டது. இதன்பின் பீஷ்வாக்கள் மஹாராஷ்டிர ராஜகாரியங்களைச் செலுத்துமிடத்து முக்கிய ஸ்தானத்தை அடைதற்குக்கூட மற்றத் தலைவரோடு போராடிச் சில வேளைகளில் அவர்களால் அவமானமும் அபஜயமும்கூட அடையவேண்டியதாயிருந்தது. இதுவரையில் இருந்ததுபோலல்லாமல் மஹாராஷ்டிரர் இதன் பின் ஐகபத்தியமிழந்து வெவ்வேறாகப் பிரிந்து ஒருவரோடொருவர் சண்டையிட்டுச் சச்சரவுப்பட்டுப் பகையரசர்களுக்கு எளனமாகி அவர் துர்ப்போதனைக்கும் துராலோசனைக்கும் உட்பட்டு வலியிழக்கலாயினர். இந்த ஸ்திதியில்கூட அக்காலத்துத் தோன்றி வலி பெற்றிருந்த ஐதராபாத், மைசூரென்னும் இரண்டு மகம்மதிய ராஜ்யங்களோடு பொருது ஜயித்துத் தமது அதிகாரத்தை முதன்மையாக ஸ்தாபித்துக்கொள்ளக் கூடுமாயினும் அக்காலத்துத் தோன்றி மொகலாய ராஜ்ய ஸ்தானத்தில் தமது ராஜ்யத்தை ஸ்தாபிக்கப் போட்டி போட்டெழுந்த இரண்டு ஐரோப்பிய ஜாதியாரோடு சமாளிக்கத்தக்க வலிமையில்லாமற் போயினர். ஆதலின் இவ்வைரோப்பியரிருவருள்ளும் வலியிறேங்கிய அங்கிலேயருக்கு முடிவில் உட்படவேண்டியதாயிற்று. இவ்வளவும் இப்பானிப்பட்டு யுத்தத்தின் விளைவென்றே எண்ணவேண்டும்.

# SRI NAMA RAMAYANAM.

# ஸ்ரீ நாம ராமாயணம்.

"When a person advances greatly in his spiritual growth, he gets a very intense love towards God. We call it *Bhakti. Bhakti* means in English love of God. When that love of God increases, he becomes united, as it were, with God. He becomes one with God in the frenzy of his love. In some Christian churches, even now, some nuns and monks think that Christ is their most beloved. Some nuns put rings on their fingers as a sign that they are married to Christ. They receive the ring from the communion. Some persons think that Christ is their own brother. So, also, in Hinduism, there are sects who cultivate the practice that God is their brother. We call it *Sakhya Bhava*, meaning brotherly affection. We establish some relation with God; and in order to get nearer to Him, in order to be closer and closer, we establish some closer relationship. The closest relationship is that of husband, or of father, or of mother, or of brother. In every religion there are such pious persons who practice in that way. We have to go about it in a practical way, so we take up all these means. And when our love has increased very much, we feel as if we had lost our individuality in the existence of God; and that is UNION. Whether a person be a Christian or a Hindu he becomes united with God. Then he does not say Christ or Buddha or Krishna but God, Iswara, Brahman, the Absolute. When that love increases to such a pitch then there is no difference; then there comes the union of everything."—*Swami Trigunatita at SanFrancisco.*

We give below an example of the way in which *Rama Nama* is meditated. Readers of *Kamalambal Charitram* will note that the heroine of the story attained to the state of union with God, by meditating on *Rama Nama*—the name that confers Bliss to the devotee who meditates on it.

---

### பாலகாண்டம்.

சுத்த ப்ரம்ஹ பராத்பர ராம்,
காலாத்மக பரமேஸ்வர ராம்.
சேஷதல்ப சுக நித்ரித ராம்,
பிரும்ஹாத்ய மரப்ரார்த்தித ராம்.
சண்ட கிரண குலமண்டன ராம்,
ஸ்ரீமத் தசரத நந்தன ராம்.
கௌசல்யா சுத வர்த்தன ராம்,
விஸ்வாமித்ர ப்ரியதன ராம்.
கோரதாடகா காதக ராம்,
மாரீசாதி நிபாதக ராம்.
கௌசிக மகஸம் ரக்ஷக ராம்,
ஸ்ரீமத் ஹகல்யோத் தாரக ராம்.
கௌதம முனிஸம் பூஜித ராம்,
ஸுரமுனி வரகண சம்ஸ்துத ராம்.
நாவிக தாவிதம் ருதுபத ராம்,
மிதுலா புரஜன மோதத ராம்.
விதேஹ மானஸ ரஞ்சக ராம்,
திரியமபக கார்முக பஞ்சக ராம்.
சீதார்ப்பித வரமாலிக ராம்,
க்ருதவை வாஹிக கோதுக ராம்.
பார்க்கவ தர்ப்ப விநாசக ராம்,
ஸ்ரீமதயோத்யா நந்தக ராம்.
ராம் ராம்ஜய ராஜா ராம்.

## அயோத்யாகாண்டம்.

அகணித குண கணபூஷித ராம்,
அவநீ காமினி காமித ராம்.
ராகாசந்தர ஸமானன ராம்,
பித்ருவாக்யா ஸ்ருத கானன ராம்.
பிரிய குஹவினி வேதிதபத ராம்,
தத்க்ஷானித நிஜம்ருதுபத ராம்.
பரத்வாஜ தருகாநந்தன ராம்,
சித்ர கூடாத்ரி நிகேதன ராம்,
தசரத சந்தத சிந்தித ராம்,
கைகேயீசுத ப்ரார்த்தித ராம்.
விரஜித நிஜபித்ரு கர்மக ராம்,
பரதார்ப்பித நிஜபாதுக ராம்.
தண்டகா வனஜன பாவன ராம்,
ராம் ராம்ஜய ராஜா ராம்.

## ஆரண்யகாண்டம்.

துஷ்ட விராத விநாசன ராம்,
சரபங்க சுதீக்ஷ ணார்ச்சித ராம்.
அகஸ்தியா நுக்ரஹ வர்த்தித ராம்,
க்ருத்ராதிப ஸம ஸேவித ராம்.
பஞ்சவடீ தட ஸுஸ்தித ராம்,
சூர்ப்பன கார்த்தி விதாயக ராம்.
கரதூஷணமுக ஸாதக ராம்,
சீதா ப்ரிய ஹரி ணாநுக ராம்.
மாரீசாதி க்ருதா சுக ராம்,
வினஷ்ட சீதான் வேஷக ராம்.
க்ருத்ராதிப கதி தாயக ராம்,
ஸபரீதத்த பலாசன ராம்.
கபந்தபாஹுச் சேதன ராம்,
ராம் ராம்ஜய ராஜா ராம்.

## கிஷ்கிந்தாகாண்டம்.

ஹநுமத்சேவித நிஜபத ராம்,
நதஸுக்ரீ வா பீஷ்டித ராம்.
கர்விதவாலி சம்ஹாரக ராம்,
வானரதூதப் ரேஷக ராம்,
ஹிதகர லக்ஷ்மண சம்யுத ராம்,
ராம் ராம்ஜய ராஜா ராம்.

## சுந்தரகாண்டம்.

கபிவர ஸந்தத ஸம்ஸ்மிருத ராம்,
தத்கதி விக்ன த்வம்ஸக ராம்.
சீதாப்ராண தாரக ராம்,
துஷ்ட தசானன தூஷித ராம்.
சிஷ்டஹநுமத் பூஷித ராம்,
சீதோதிகா காவண ராம்.
க்ருத சூடா மணி தர்சன ராம்,
கபிவர வசனாஸ் வாதித ராம்,
ராம் ராம்ஜய ராஜா ராம்.

## யுத்தகாண்டம்.

ராவணநிதன ப்ரஸ்தித ராம்,
வானரசைன்ய ஸமாவ்ருத ராம்.
சோஷித ஸரோதீ ஸார்த்தித ராம்,
விபீஷணாபய தாயக ராம்.
பர்வத ஸேது நிபந்தக ராம்,
கடகர்ண சிரச் சேதக ராம்.
ராக்ஷஸ கோடி விமர்த்தக ராம்,
அஹிமஹி ராவண மாரண ராம்.
ஸம்ஹ்ருத தசமுக ராவண ராம்,
விதிபவ முகஸுர ஸம்ஸ்துத ராம்.
கஸ்தித தசரத வீக்ஷித ராம்,
சீதா தர்சன மோதித ராம்.
அபிஷிக்த விபீஷ ணாநுத ராம்,
புஷ்ப விமாண ரோகண ராம்.
பரத்வா ஜாதிவி ஷேவண ராம்,
பரதப்ராணாந விதாரண ராம்.
ஸாகேதபுரி பூஷண ராம்,
ஸகலஸ்வீய ஸமாவ்ருத ராம்.
ரத்னல ஸத்பீ டஸ்தித ராம்,
பட்டாபிஷேகா லங்கிருத ராம்.
பார்த்திவ குலஸம் மாளித ராம்,
விபீஷ ணார்ப்பித ரங்கத ராம்.
கீச குலாநு க்ராஹக ராம்,
ஸகல ஜீவஸம் ரக்ஷக ராம்.
ஸமஸ்த லோகோத் தாரக ராம்,
ராம் ராம்ஜய ராஜா ராம்,
ராம் ராம்ஜய சீதா ராம்.

ராமாய ராமபத்ராய
ராமசந்திராய வேதஸே
ரகுநாதாய நாதாய
ஸீதாய பதயேநம:—
ராமாபிராமம் நயனாபிராமம்,
வாதாபிராமம் வதனாபிராமம்.

ஓம் சீதாலக்ஷ்மண பரத சத்ருக்ன அனுமத் ஸமேத ஸ்ரீராமசந்தர பரப்ரம்ஹணேநம:

ஓம் தத் ஸத்.

## AGRICULTURISTS AND THE WAR

(FROM THE AGRICULTURIST.)

## கிருஷிகரும் சண்டையும்.

தற்காலத்தில் ஐரோப்பாவில் மஹாபாரதப் போரைப் பார்க்கிலும் அதிக கோரமான யுத்தம் நடக்கிறதென்று நமது சந்தா நேயர்கள் பலரும் அறிவர். இந்த யுத்தத்தினல் பொதுவாக அமெரிக்கா, ஜப்பான், நார்வே, சுவீடன், டென்மார்க் முதலான சில தேசங்கள் தவிர மற்ற தேசத்தாரெல்லாருக்கும் நஷ்டந்தான். இந்த யுத்தத்தினல் அமெரிக்கா தேசத்தவர் தான் அதிக தனவந்தராஞர்கள். ஐரோப்பா தேசத்தவர்களைப்போல் சண்டையை நேரில் பார்த்தும் சேனைகள் ஒருபக்கத்திலிருந்து மற்றொருபக்கத்திற்குப் போவதால், ஜனங்களுக்கு ஏற்படக்கூடிய அசௌகரியங்களையும் கஷ்ட நிஷ்டூரங்களையும் அனுபவியாமலும், ஓர் ஊரில் சண்டை நடப்பதால் பீரங்கிக்குண்டுகள் வெடிகுண்டுகள் முதலியவை விழுவதால் ஊர்கள் நாசமாக்கப்படுவதையும், ஸ்ரீகள் ஹிம்சிக்கப் படுவதைப்போலொத்த சண்டையினல் ஏற்படும் பல கொடுமைகளை நாம் அனுபவியாவிட்டாலும் நாமும் பலவிதமான கஷ்டங்களுக்குட்பட்டிருக்கிறோமென்பதை எவராலும் மறுக்கமுடியாது. பொதுவாக ஐரோப்பிய சாமான்கள் சரிவர இறக்குமதி யாகாததால் சரக்குகளின்விலைகள் கிராக்கியான தல்லாமல் ஆஸ்த்திரியா ஹங்கரி, ஜெர்மனி முதலிய நமது விரோதிகளின் தேசங்களிலிருந்து வந்துகொண்டிருந்த காகிதங்கள், பென்சல்கள், கண்ணுடிச் சாமான்கள், சாயச்சாமான்கள் முதலியன வராததால் நாம் படும் கஷ்டத்திற்களவில்லை. ஷை சாமான்களைப்போலொத்த சாமான்களைச்செய்ய இங்கிலாந்திலுள்ள நிபுணர்கள் எவ்வளவோ பிரயாசைப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். இருந்தும் ஜெர்மனியிலிருந்து வந்துகொண்டிருந்த சாயத்திற்குச் சமானமான சாயங்கள் கண்டுபிடிக்காததால் நெசவாளிகள் பலர் வேலையற்று சோற்றுக்குத் திண்டாடுகிறார்கள். இப்படி பல வகுப்பார் பலவிதமான கஷ்டங்களை யனுபவித்துக்கொண்டிருக்க, தாங்களாக விவசாயம் செய்து சாப்பிடும் கிருஷிகரை மட்டும் இச்சண்டையானது பாதித்திருக்கமாட்டாதென்று பலர் நம்புகிறார்கள். தென் ஆற்காடு, வட ஆற்காடு, மேல்சமுத்திரக்கரை நாடுகளிலுள்ள கிருஷிகர் அதிக நஷ்டத்திற்குள்ளாயிருக்கிறார்கள். வட ஆற்காடு தென்ஆற்காடு ஜில்லாக்களிலுள்ள கிருஷிகர் நஷ்டமடைந்ததற்கு அவர்கள் தான் காரணகர்த்தாக்களாயிருந்தார்கள். ஏனெனில் எப்போது ஐரோபாவின் முக்கியமாகிய பெரிய தேசங்களிலெல்லாம் சண்டையாரம்பித்து விட்டதோ அப்போது இச்சண்டை சீக்கிரம் ஓயாதென்றும் ஆகையால் வியாபாரப் பயிர்களாகிய, மணிலாக்கொட்டை, பருத்தி முதலிய பயிர்களைப் பயிரிடுவது இலாபகரமாயிராதென்றும், அதைவிட தானியப்பயிரிடுவதுதான் சிலாக்யமென்றும் நாம் நம்மாலியன்றமட்டும் வற்புறுத்தி எழுதினதையும் சொன்னதையும் சற்றும் கேளாமல் வாலாயமாய்ச் செய்துவந்த ஷை மணிலாக்கொட்டை, பருத்தி முதலிய பயிர்களைமட்டும் செய்துவந்ததால் ஷை இரண்டு ஜில்லாவாசிகள் அதிக கஷ்டநஷ்டங்களுக்காளாகி தாங்கள் பரம்பரையாய் வைத்திருந்த நிலங்களை அநேகர் இழக்கும்படி நேரிட்டது.

சண்டை ஆரம்பித்ததற்கு முந்திய வருஷத்தில் மழைகள் பெய்யாததாலும் வேறு காரணங்களாலும் விலைவாசிகள் அதிகமாயிருந்தும் நமது இராஜதானியில் 1,024,281-கிருஷிகர் தான் தீர்வை சரியானகால அளவில் செலுத்தாமலிருந்து அவர்களுக்கு விரோதமாய் நடவடிக்கைகள்நடத்தி சர்க்கார்தீர்வை வசூல்செய்தார்கள். ஆனல் சண்டை ஆரம்பித்த வருஷமாகிய 1914-1915ல் 1,331,635 பேர் தீர்வை செலுத்தவில்லை. ஆகவே முந்திய வருஷத்தைவிட மழைகள் சற்று சுபிக்ஷமாய் பெய்திருந்தும் முந்தின வருஷத்தைவிட 307,354-பேர்

அதிகமாய்த் தீர்வைசெலுத்தாமல் இருந்திருக்கிறார்கள். இதற்குக்காரணமென்னவென்று சற்று ஆராய்வோம். சண்டை ஆரம்பித்த உடனே கொப்பரைத் தேங்காயின் விலையும், மணிலாக் கொட்டையின் விலையும் திடீரென்று இறங்கிவிடவே சம்சாரிகள் இன்னது செய்வதென்று தெரியாமல் திகைத்தார்கள். முக்கியமாய் மணிலாக்கொட்டை பயிர்செய்யும் தென்ஆற்காடு ஜில்லாவையும் வடஆற்காடு ஜில்லாவையும் ஒப்பிட்டுப் பார்ப்போம். வட ஆற்காடு ஜில்லாவில் சண்டை ஆரம்பிப்பதற்கு முன் வருஷத்தில் 287,000 கிருஷிகர்தான் தீர்வை செலுத்தாமலிருந்தார்கள். சண்டை ஆரம்பித்த பிற்பாடோ, 515,000 கிருஷிகர் தீர்வை செலுத்தவில்லை. ஆகவே சண்டைக்கு முன்னுலிருந்ததைவிட சண்டைக்குப் பின்னுல் 228,000-பேர் அதிகமாய் தீர்வை செலுத்தாமலிருந்திருக்கிறார்கள். இதைப்போலவே தென் ஆற்காட்டில் சண்டைக்குமுன்னுல் 8,569-பேர் தீர்வை செலுத்தாமலிருந்திருக்க, சண்டை ஆரம்பித்தவுடனே 25,513-பேர் தீர்வை செலுத்தவில்லை. இதில் முந்தின வருஷத்தைவிட 16,444-பேர் அதிகமாய் தீர்வை செலுத்தாமலிருந்திருக்கிறார்கள். பரம்பரையாய் கிருஷிகர் அனுபவித்துவரும் நிலங்களைத் தீர்வை செலுத்த சக்தியிருந்தால் ஏலம்போட விட்டுவிடுவார்களா? ஒருக்காலும் விடமாட்டார்கள். சர்க்கார் தீர்வை செலுத்தாவிட்டால் முதலில் தீர்வை செலுத்தும்படி கட்டாயப் பத்திரம் (Demand) வரும். இது வந்த பின்னும் குறிப்பிட்ட தேதிக்குள் தீர்வை செலுத்தாவிட்டால் ஜப்தி நோட்டீசும் (Notice of Distraint) அதற்கும் செலுத்தாவிட்டால், ஏல நோட்டீசும், அந்தத் தேதிக்குள்ளும் செலுத்தாவிட்டால், ஏலம் போட்டு விற்று விடுவார்கள். அப்பால் நிலமானது இந்தக் கிருஷிகனுக்குச் சொந்தமாகாது. நமது இராஜதானியில் இப்படித் தீர்வை செலுத்தாமலிருந்த 1,331,635 நபர்களில் கஷ்டப்பட்டோ, கடன்வாங்கியோ, வேறுவிதமாகச் சேகரித்தோ, எப்படியோ, பெரும்பான்மையோர் நிலத்தீர்வை செலுத்திவிட்டார்கள். அப்படிச் செலுத்தத்தவறி, நிலங்கள் விற்கப்பட்டவர்களின் எண்ணம் அதற்கு முந்திய வருஷத்தில் 1,724, ஆயிருக்க, சண்டைக்குப்பின் வருஷத்தில் 2,012 ஆயிற்று 318பேர் அதிகமாக இந்த வருஷத்தில் நிலத்தை இழக்கும்படி நேரிட்டது. இப்படி ஏலம் போடப்பட்டு வாங்கிய புஞ்சை நிலங்களின் சராசரிகிரயம் முந்திய வருஷங்களில் நிலத் தீர்வையைவிட 9-பங்கு அதிகமாயிருந்திருக்கிறது. ஆனல் சண்டைக்குப்பின்னுல் நிலத்தீர்வையைவிட சராசரி 6-பங்குதான் அதிகமாய் விற்றிருக்கிறது. மேலும் முந்தின வருஷத்தில் 1,213-ஏக்கரா புன்செய் நிலத்தை ஏலம்போட்ட போது கேட்பாரில்லாமல் சர்க்கார்தாமே வாங்கியிருக்க 1914-15-ல் 2,186-ஏக்கராக்கள் விலையாகாமல் சர்க்காரால் வாங்கப்பட்டது. ஆகையால் தேசத்தில் பொருள்குறைந்து வருகிறதென்றும் நன்ருய்த் தெரிகிறது.

நமது கிருஷிகர் மணிலாக்கொட்டை, பருத்தி முதலிய பயிர்களைச் செய்து நஷ்டமடையாமல் அரிசி, சோளம், கேழ்வரகு, முதலிய தானியப்பயிர்களையும், கரும்பு முதலிய நமது தேசத்தில் விலைப்போகக்கூடிய வியாபாரப் பயிர்களையும் சண்டை ஒழியும் மட்டும் பயிர் செய்தால் தக்க லாபம் அடைவார்களென்று நம்புகிறேம்.—கிருஷிகன்.